கடவுள் துணை.

கருணாநந்த சஞ்சீவி மருந்துகளை

அனுக்கிரகித்த

# கருணாநந்தசித்தர் சரித்திரம்.



ஊற்றுக்காடு பிரமஸ்ரீ சுப்பராயரவர்கள்

குமாரர்

கிருஷ்ணசாமி ஐயரவர்களால்

சென்னை:

ஷோ அண்டு கம்பெனி யென்னும் "பிரீமியர்"

அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது.

1906.

உ

# முகவுரை.



கருணானந்த சஞ்சீவி என்னும் அவுடதங்களினாற் பெரும்பயனை அடைந்து வரும் என் அன்பர்களே! இம்மருந்துகளாலுண்டாகும் ஆச்சரியமான குணத்தை நானே நேரிற்கண்டு மிகவும் வியப்படைந்து இம்மருந்தை வெளிப்படுத்திய மகாராஜ ராஜ ஸ்ரீ மு. ஆபிரகாம் பண்டிதரவர்களிடம் சென்று விசாரித்தேன். தக்க பெரியார் ஒருவரால் தரப்பட்டதென்று தெரிந்து அப்பெரியார் வரலாற்றையறிய அடங்கா ஆவலடைந்தேன். பண்டிதரவர்கள் சாதகத்தைத் துணையாகக்கொண்டு மருந்தை உபகரித்த பெரியாரின் சாதகத்தை என் அன்பரான காலஞ்சென்ற கூடலூர் ஸெண்ட் ஜோஸெப் காலேஜ் தமிழ்ப் பண்டிதர் பிரமஸ்ரீ சி.மு. சாமிநாதையரவர்களால் குரு சுக்கிர நாடியிலிருந்து கண்டுபிடித்து அளவிறந்த சந்தோஷம் அடைந்தேன். இதைவாசிக்கக் கேட்டிருந்த என் அன்பர்கள் பலர் இதை அச்சிட்டுத் தரல்வேண்டும் என்றார்கள். அவர்கள் விருப்பத்திற் கிணங்கக் குரு சுக்கிர நாடியிலிருந்து எடுத்த இக்கருணாநந்தர் சரித்திரத்தை வசனப்படுத்தி அச்சிடின் எல்லாருக்கும் பயன்படலாம் என்று கருதி வேண்டும் இடங்களில் விரித்து வசனப்படுத்தித் தரவேண்டுமெனக் கேட்கப் பிரமஸ்ரீ சி. மு. சாமிநாதையரவர்கள் எழுதித் தந்தார்கள்.

இவ்விரண்டையும் அச்சிடுவதன் முன் பிரமஸ்ரீ சி. மு. சாமிநாதையரவர்கள் காலஞ்சென்றதால் திருப்பாதிரிப்புலியூர்ச் சந்நிதி வீதியிலுள்ள திருக்கோவலூ ராதீன ஞானியார் மடாலயம் ஸ்ரீலஸ்ரீ சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் துணைகொண்டு அருஞ்சொற்பொருள் விளக்கத்துடன் மூலமும் வசனமும் அச்சிட்டிருக்கிறேன்.

இந்நூலை வாசித்தலால் அப்பெரியாரின் தாய்தந்தையர், பிறந்தகாலம், கலைபயிற்சி, யோகசாதனை, முதலியவைகளும் அவர் மாணவகரின்ஞரென்பதும் அவர் சஞ்சரித்த இடங்கள் இன்ன என்பதும் அவர் காலத்துள்ளார் இன்ஞரென்பதும் நன் குணரத்தக்கவை. அச்சிடும்முறை இன்னதென்றே அறியா நான் இதை அச்சிடத்துணிந்தது எல்லாம் இம் மகானின் அரிய மருந்துகளால் சுகம் அடைந்தாரும், சுகம் அடையக் கண்டாரும், சுகம் அடைந்து வருகிறூர்களெனக் கேட்டாரும் இச்சரித்திரத்தை உணர்ந்து களிக்க ஏதுவாகுமென்பதை உட்கொண்டே ஆதலால் இதிற்காணும் குற்றத்திற்கு அறிஞர்கள் என்னை மன்னிப்பார்களாக.

இதை அச்சிடுவதில் எனக்குதவிசெய்த ஸ்ரீலஸ்ரீ சுவாமிகளவர்களிடத்தும் மகாராஜராஜ ஸ்ரீ மு. ஆபிரகாம் பண்டிதரவர்களிடத்தும் என்றும் மறவா நன்றியறிதலுடையேன்.

இங்ஙனம்,

7—9—05. தஞ்சை. } சு. கிருஷ்ணசுவாமி ஐயன். பென்ஷன் போஸ்டு மாஸ்டர்.

உ

திருச்சிற்றம்பலம்.

# அபிப்பிராயம்.



மலர்தலை உலகில் முன்னைவினைக் கீடாக உயிர்கள் பிறப்பை அடைகின்றன. உயிர்கள் எடுக்கும் பல பிறவிகளுள் மனவுணர்வான் மேம்பட்ட மானுடராதல் அருமை. மானுடப்பிறப்பினை யடைந்ததின் பயன் வேறு எப்பிறப்பும் எடாமையே. ஞானமொன்றே பிறப்பை நிவர்த்திப்பது. எல்லாம் வல்ல முழுமுதற் கடவுளடித் துணையை அகத்திற்கொண்டு உலகவியல் இற்றெனத் தெளிந்து தற்போதம் இழந்த கருணை வடிவினராம்பெரியாரைப் பேணி வழிபட்டாரே ஞானம் பெறுவர். அவருள் தம் அனுபவத்தின் மட்டும் மனஞ்செலுத்தினர் பலர். தம் அனுபவத்தோடு ஏனைய சீவர்களும் தம்போல நற்கதி அடைந்துய்ய உபதேசிப்பான் புகுந்தார் பலர். உபதேசிப்பான் புகுந்தாருள் "ஞானம் பெறுதற்கின்றியமையா உடலினை அடுக்கும் பல்வகை நோயினையும் தக்க மருந்துகளான் போக்கினன்றோ மனம் நிலையுறும். உறவே நற்கதி பெறலாம்." எனக் கொண்டு தக்க மருந்து கண்டு கொடுத்து நோய் நீக்கி அருளுவார் சிலர். இங்ஙனே பலவிடத்தினும் எதியும் பலர்க்கும் பல்காலமும் செய்தலே தகுதியெனத்துணிந்து அவ்விதமே செயற்குத் தங்கள் காயத்தைச் சித்திசெய்து கொண்டார்

சிலர். நன் மாணாக்கர் பலரைத் துருவி " எல்லா முடையார் அறிவுடையார். அன்பும் அருளும் உளவழியே அறிவுடையார் எனப்படுவர். சார்ந்தார் அயலார் இருதிறத்தாருள் யாரேனும் உறுகண் உற்றவிடத்துச் சுவை வீரியம் விளைவாற்றல்களான் மேம்பட்ட மருந்து முதலிய உபகரித்து இன்புறச்செயலே அன்பும் அருளும்." என அறிவுறுத்தித் தம்போல் உலகர்க்கருளும்படி மாணவகப் பாம்பரையை நிறுத்தினர் சிலர். இங்ஙன் பலதிறப்பட்ட பெரியோர் சரிதந்தெரிந்தபோதன்றோ அவரை வழிபட்டு அன்பு பெற்று உய்தல் கூடும்.

இதுபற்றியே படு பொருளுணர்ந்த பரமன் அடியார்கள் சரிதம் வெளிப்படற்குத் தானே காரணமாக இருந்தமை. "உற்றநோய் நீக்கி யுறாஅமை முற்காக்கும், பெற்றியார்ப் பேணிக்கொளல்" என்பது உத்தரவேதம் அன்றோ.

இத்துணையும் கூறிப்போந்த அரிய பெரிய குணங்கள் முற்றும் ஒருங்கெய்திய பெரியோர்களுட் சிறந்தார் ஸ்ரீ கருணாநந்தவடிகள் பசுபதிப் பெயரிய தனிமுதற் கடவுள் அருள் வடிவாயவர். சோதிடம், வைத்தியம், சித்திகள், யோகம், ஞானம் இவைகளிற் சிறந்தார். பல்லாண்டுகளாகப் பல நன் மாணாக்கர்களால் உலகிற்குப் பேருபகாரஞ் செய்து போதருவார். அவர் பெயரான் வெளிவரும் மருந்துகள் பல பிணிகட்கும் ஏற்றல், பகுதியோடு பொருந்துதல், கருதிய நன்மையைப் பயத்தலேயன்றி வேறு எத்தீங்கும் செய்

யாமை, மேம்படு ஆற்றலுடைமை முதலியவைக ளாற் சிறந்தன என்பது உலகில் பலரும் கண் கூடாகக் கண்டு வருவது. இம்மருந்தாற் போத ரும் நன்மைகள் பல என்பதை நம் ஆப்தர் பலர் சொல்லானும் நம் அனுபவத்தானும் ஐயஞ் சிறி துமின்றித் துணிந்துகூற முன்வருவம். இவ்வுல கிற்குப் பேருபகாரியாகிய இம்மகான் எவ்விடத் தினரோ எவர் குமாரராகக் காணப்பட்ட னரோ எவ்வனுபவம் உடையாரோ எவ்வழி யான் இத்துணை யாற்றல் பெற்றனரோ என்று ஒவ்வொருவரும் எண்ணி அறிய விரும்புதல் இயற்கை. இவற்றை நன்கு தெரிவிப்பது இந்நூ லேயாகும். ஸ்ரீ கருணாநந்தர் சரித்திரம் என்னும் இந்நூல் குரு சுக்கிர நாடியிலிருந்தெடுத்த மூலத் தையும், பெரும்பாலும் அதற்கிணங்கக் காலஞ் சென்ற பிரமஸ்ரீ சி. மு. சாமிநாதையரவர்களாற் செய்துள்ள வசனத்தையும் உடையது. இந்நூலை வாசித்தல், உயிர்கள் இன்றியமையாமற் பெற வேண்டிய பரஞானம், அபரஞானம், யோகபே தங்கள், சரியை கிரியாமார்க்கங்களின் நிலை ஆகிய இவற்றைத் தெற்றென அறிதற்குச் சாதனமா கும். இவ்வரிய நூலைப் பலரும் வாசித்து வேண் டியவைகளைப் பெறும்படி அச்சிட்டுத் தந்த பிரமஸ்ரீ கிருஷ்ணசாமி ஐயரவர்களின் நன்றியை எப்பொழுதும் மறவேம். எல்லா'ம் இறைவன் அருள்.

இங்ஙனம்.

சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரியசுவாமி.

திருக்கோவலூராதீன ஞானியார்

மடாலயம் சந்நிதி வீதி,

திருப்பாதிரிப்புலியூர்.

விசுவாவசுஹு }
கடகரவி கசவ. }

உ

கடவுள் துணை.

# அருஞ்சொற்பொருள் விளக்கம்.

## (மூ ல ம்.)

---

பாட்டு.

1. நிறம்—மார்பு.
பொதுளிய—நிறைந்த.
ஒவலில்—நீங்குதலில்லாத

2. பணியுலகு—நாகர் உலகு.
வதிவோர்—வசிப்போர்.
வல்லேம்—வல்லவர்களல்லேம்.
பௌவம்—கடல்.

3. பக்கல்—பக்கம்.
செய்—வயல்.
உரைமயங்கி மலர்வாரின் — நல்லுரையென்று தீயுரை கேட்டு முகமலர்ச்சி அடைபவர்களைப் போன்று.
ஒருங்கு—சேர.
நான்கு :—அறம், பொருள், இன்பம், வீடு.
மூன்று :—அறம், பொருள், இன்பம்.
இரண்டு:—அறம், பொருள்.
ஒன்று :—அறம்.

4. துறுமிய—நெருங்கிய.
விரை—வாசனை.
பரையரன்—பராசத்தியோடு கூடிய அரனே. பரையே அரனே எனப்பொருள் கோட

லும் ஒன்று. அண்மை விளியாதலின் இயல்பு.

பயிறல்=பல்கால் சொல்லிப்பழகல்.

5. ஆறறி அந்தணர் = ஓதுதலாதி அறுதொழிலை யறிந்த வேதியர்.

கிடை=வேதம் ஓதுமிடம்.

ஆறறியோகியர்=மூலாதாராதி ஆறு ஆதாரங் களையும் அறிந்த யோகிகள்.

ஆறறி அறிஞர்கள்=(முத்திக்குரிய) வழியை அறிந்த ஞானிகள்.

ஆறரி=காமாதி அறுபகையை.

6. போகிய=கற்றுத்தேர்ந்த.

7. இட்டி=யாகம்.

மணை,விணை—இடைக்குறை,மண்ணை விண்ணை யென்றபடி.

8. ஆவுதி=ஆகுதி.

9. இறும்பூது=அதிசயம்.

10. இரண்டாம் ஆச்சிரமம்=இல்லறம்.

பிதுர்யாகாதியைந்து=பிதுர்யாகம், பிரமயாகம், தேவயாகம், மானுடயாகம், பூதயாகம்.

சிவணுறுது=பொருந்ாது.

மிருதி=ஸ்மிருதி.

பவனம்=உலகு.

பரிந்து=கவலைகொண்டு.

11. மான்ற=மயங்கிய.

கான்றசொன்றி=கக்கியசோறு.

12. குறும்பு=தவறு.

செற்று=ஒழித்து.

பவஞ்சம்=பிரபஞ்சம்.
குலக்கு=குலத்துக்கு.

13. மூன்னல்=தியானித்தல்.

14. மயர்=மையல்.
செயிர்=குற்றம்.

15. மகவினின்=மகவினால்.
அறல்=நீங்குதல்.

16. பாற்றுதல்=நிவர்த்தித்தல்.
சிவம்=மங்களம்.
கவல்=கவலை.

17. தற்காலம்=அப்போது.
தனிதம்=முழக்கம்.

18. பீசதானம்=விரைவழங்கல்.

19. தாயது=தாவியது.
வாயில்=வழி.

20. கண்ணி=எண்ணி.
மூவழு:—ஐயம், திரிபு, அறியாமை.

21. கணித நூல்=சோதிட நூல்.

22. வெச்சென=விரைவாக.
ஏண்=வலிமை.

23. நயந்திட=விரும்ப.

24. கொந்து=கொத்து.

25. பகலவன் சுதற்குரிதினம்=சனிக்கிழமை.
ஆரல்=கிருத்திகை.
இனன்=சூரியன்.

26. வாகம் என்பதில் அம் சாரியை.

27. கருதலர்=பகைவர்.

28. அலக்கண்=துன்பம்.

29. ஆரிய=உயர்ந்தோய்.

30. முறை=நூல்.

31. வானமும்—உயர்வு சிறப்போடு எதிரது தழீஇய எச்சவும்மை.

32. தத்துவதரிசனம்=பிருதிவிமுதல் நாதம் ஈறுன முப்பத்தாறு தத்துவங்களேயுஞ் சடபதார்த்தமென்று தன் அறிவிலே விளங்கக் காண்பது.

தத்துவசுத்தி = மேற்கூறிய தத்துவ வகையில் நில்லாது கண்ணுதல் அருளால் நீங்கல்.

ஆர்வுற்ருன்=ஆசைகொண்டான்.

33. பொருவிலாத=இணையற்ற.

34. உஞற்றிட=செய்ய.
வருடி=தடவி.

35. ஆலமர்குரு=தக்ஷிணமூர்த்தி.

36. முழை=குகை.
உசாவியும்=கேட்டும்.
சவி=ஒளி.

37. ததி=சமயம்.
அரந்தை=துன்பம்.

38. முகமன்=உபசாரவார்த்தை.

39. லேகர்=தேவர்.

40. அமுதாசனர்=தேவர்கள்.

42. என்னரும்=எப்படிப்பட்டாரும்.

43. பொறித்த=தங்கிய.

உரம்=மார்பு.

44. என்று=சூரியன்.

சிகரி=மலை.

கருணை=அம்பிகை.

45. பழிச்சிட=துதிக்க.

46. குயிற்றி=செய்து.

அங்குரங்கொள்ள=தோன்ற.

அகன்று=அப்பாற்பட்டு.

இறை=விடை.

47. விடை=இடபம், உத்தரவு.

பெற்றி=தன்மை.

48. உலவை=கிளை.

49. கானனம்=காடு.

50. பயாபதி=அரசன்.

பொச்சம்=பொய்.

கச்சம்=அளவு.

அளக்கர்=கடல்.

51. ஒசிந்து=துவண்டு.

52. வசி=வாள், வசப்படுத்துகின்ற எனினும் ஆம்.

அகடு=வயிறு.

53. விதந்து=எடுத்து.

54. வனம்=அழகு.

சக்கு=கண்.

55. கதம்=பாபம்.

56. தினஞ்செய்வோன்=சூரியன்.

57. ஆயுள்வேதம்=வைத்திய நூல்.

துழனி=ஒலி.

58. கிடைத்து=அடைந்து.

59. தெவ்விய=வௌவிய.

60. ஓரிய=அறிந்த.

61. அதகங்கள்=மருந்துகள்.

62. எல்லொளி – மீமிசைப்பெயர்.

63. விறந்திடு=மிகுந்த.

64. தாவலில்=கெடுதலற்ற.

65. பரிகரிக்கெண்ணி—பரிகரிக்க + எண்ணி.

66. ஆய்வு=ஆராய்தல்.

பகர்ச்சியர்=சொல்வோர்.

67. விம்மிதம்=அதிசயம்.

அகணித வளர்ச்சி=அளவுபடா வளர்ச்சி.

68. விண்ட=மலர்ந்த

69. மயர்வு=மயக்கம்.

70. துங்கம்=உயர்வு.

71. இருத்துகென்று—இருத்துக + என்று.

72. செம்மல்=உயர்ந்தோன்.

73. பாங்கு=ஒழுங்கு.

74. நன்றி=நன்மை, பண்பாகு பெயர்.

வன்றி=பன்றி.

75. காய்ந்து=வெறுத்து.

76. இரிக்கும்=போக்கும்.

77. பகமலம்—மலம் பக,
பக=நீங்க.
78. உன்னி=எண்ணி.
79. பம்பு=பெருகுகின்ற.
80. முன்னல்=அடைதல்.
81. அகவை=வயது.
ஔவை=தாய்.
கவ்வை=முழக்கம்.
82. சவலை=வாட்டம்.
திவள்=விளங்குகின்ற.
83. நீர்க்குறி நூல்=ஓர் வைத்திய நூல்.
பழங்கண்=துன்பம்.
84. வீறு + அறும்=வீற்றறும். வீறு=விளக்கம்.
ஈறு + உறும்=ஈற்றுறும்=முடிவான.
குரவற்கா=குருவுக்காக.
85. வேட்கை=ஆசை.
தாள்=முயற்சி.
86. மயர்ந்தனர்=மறந்தார்.
புடவி=பூமி.
அஃறிறங்கொண்டு=தீயவழியை அடைந்து.
மலைந்து=மயங்கி.
87. குரு=மருந்தின் விசேடம்.
88. பொன்றலில்=கெடாத.
89. விம்மலை=துக்கத்தை.
90. நோய் முதல் நான்கு:—நோய், மருந்து, நோயுற்றோன், நோயுடையானை உபசரிப்போன்.
91. புரணம்=பூரணம்.
ஒல்லாத=தகாத.

92. தரம்=மேன்மை.
மாணி=மாணவகன்.
தன்ன=தன்னுடைய.
93. நந்தலில்=கெடாத.
94. தாலம்=பூமி.
அநுலோமசாதி=உயர்ந்தஆணும் தாழ்ந்தபெண்ணுங்கூடி உண்டாய வகுப்பு.
கால்=வாயு.
95. யோகு=யோகம்.
96. அண்ணி=அடைந்து.
97. மல்லல்=வளப்பம்.
98. ஔவியம்=சகியாமை.
99. பிரத்தியக்கம்=நேரிற்காண்டல்.
பிறங்கல்=விளங்கல்.
வான்மணி=சூரியன்.
அரவிறை=ஆதிசேடன்.
100. அமயம்=சமயம்.
101. உவகைதுய்த்தனன்=சந்தோஷித்தான்.
102. தெற்றென=தெளிவாக.
தெளித்து=தெளிவித்து.
103. பக=பிளவுபட.
உய்த்து=அனுப்பி.
104. கண்டு=கற்கண்டு.
105. ஏது=காரணம்.
106. பெட்புற=விரும்புற.
107. குழுமி=கூடி.
துனி=துன்பம்.
சூழ்கிடந்த=சூழ்ந்து கிடந்த.
நாகம்=மலை.

108. வரவு=வரலாறு. (காரணப் பொருளது.)
109. அபிதானம்=பெயர்.
111. கான்=வாசனை.
112. கதுமென=விரைவாக.
பார்த்த=பூமியிலுள்ள.

## வ ச ன ம்.

பக்கம்.

35. துருமம்=சோலை
ஆகரம்=இடம்.
36. நுகர்வோர்=அநுபவிப்பார்.
பங்கு=முடம்.
37. மோசனஞ் செய்வது=நிவர்த்திப்பது
38. கோசம்—குரோசம் என்பதின் திரிபு.
சான்று=சாட்சி.
39. சின்னங்கள்=அடையாளங்கள்.
களைகண்=ஆதாரம்.
முகுளிதம்=முகூர்த்தம்.
வயா=பிரசவ வலி.
40. கோள்கள்=கிரகங்கள்.
41. தூலம்=பஞ்சு.
மகரரவி=தைமாதம்.
ஸ்திரவாரம்=சனிக்கிழமை.
42. சிகி=கேது.
குஜன்=செவ்வாய்.
ரவி=சூரியன்.
43. நாப்பண்=நடு.




44. நடுவண்=நடு.
கவடு=கிளை.
தமாலம்=மரவிசேடம்.

45. லலாடம்=நெற்றி.

46. ஆமலகம்=நெல்லி.
சேடம்=மிகுதி.

47. குழாம்=கூட்டம்.
விராவி=கலந்து.
செறிவு=மிகுதி.
வாளா=சும்மா.
வேத்திரம்=பிரம்பு.

48. பூதி=விபூதி.

50. பூபதி=அரசன்.

52. ஆதி=மனம்பற்றிய நோய்.
வியாதி=உடல்பற்றிய நோய்.
பரஞானம்=அநுபவஞானம்.
அபரஞானம்=கலாஞானம்.

56. உருவம் நான்கு, அருவம் நான்கு, அருவுருவம் ஒன்று.

57. மூகை=ஊமை.

58. அதிட்டித்தல்=நிலைக்களங்கொண்டு செலுத்தல்

60. சுரதரு=தேவவிருட்சம்.
அநவரதமும்=எப்போதும்.
கல்லாரம்=நீலோற்பலம்.

62. வித்துருமம்=பவளம்.
லதை=கொடி.

63. வாந்தியசனம்=கக்கியசோறு.

64. மானம்=அளவு.




65. ஆகாரம்=வடிவம்.
66. வியோமம்=ஆகாசம்.
67. ஔத்திரி=தீக்ஷை.
சைலாதி=நந்திகேசுரர்.
70. தக்தபடம்=கொளுத்தப்பெற்ற ஆடை.
71. சரணாகதி=அடைக்கலம்.
72. சாம்பவி, பைரவி, கேசரி என்று முத்திரை மூன்று வகை.
73. வரை=மலை.
ஆண்டலை=கோழி.
74. வனப்பு=அழகு.
சூழல்=இடம்.
ஒழுக்கம்=ஓட்டம்.
76. பயில்வித்து=பழகச்செய்து.
பொழுது=காலம்.
77. ஆசித்து=ஆசைப்பட்டு.
78. வராகி=அம்பிகாசக்தி.
79. புகர்=சுக்கிரர்.
80. கேரளம்=மலையாளம்.
81. மகிதலம்=பூலோகம்.
தொடக்கம்=ஆரம்பம்.
84. அப்பிராகிருதம்=பிரகிருதியின் சம்பந்த மற்றது.

[வேதாந்தம், சித்தாந்தம், யோகாந்தம், சித்தர் நூல் ஆகிய இவைகளின் பரிபாடைகளை யொதுக்கி ஏனைய அருஞ்சொற்களுக்கே பெரும்பாலும் பொருளுரைக்கப்பட்டன. ஒரு சொல் பல இடங்களினும் வருமாயினும் ஓரிடத்தில் மட்டுமே பொருள் குறித்துளது.] சில அருஞ்சொற்றொடர்களுஞ் சேர்ந்துள்ளன.

உ

# செய்யுள் முதற் குறிப்பகராதி.


| | பக்கம். |
|---|---|
| அஃதுணர்ந் ... ... ... | 25 |
| அக்கிரியொரு ... ... .... | 14 |
| அகத்தியர ... ... ... | 22 |
| அங்குளமு ... ... ... | 16 |
| அங்குறைதே ... ... ... | 11 |
| அங்ஙனநி ... ... ... | 17 |
| அச்சமயம் ... ... ... | 14 |
| அச்சுபவ ... ... ... | 6 |
| அட்டமியு ... ... ... | 15 |
| அணிமாவா ... ... ... | 11 |
| அநந்தரச ... ... ... | 26 |
| அப்போதங் ... ... ... | 12 |
| அம்மலைய ... ... ... | 26 |
| அம்மலையி ... ... ... | 23 |
| அம்மலைவ ... ... ... | 21 |
| அருவிடையா ... ... ... | 14 |
| அவ்வசியற் ... ... ... | 23 |
| அவ்வனத்தி ... ... ... | 1 |
| அவ்வேளாண் ... ... ... | 28 |
| அவனிரண் ... ... ... | 3 |

| | பக்கம். |
|---|---|
| அன்றுதொட் ... ... ... | 25 |
| ஆங்ககன் ... ... ... | 21 |
| ஆங்கிருந் ... ... ... | 14 |
| ஆய்ந்தசெந் ... ... ... | 22 |
| ஆயபின் ... ... ... | 6 |
| ஆறறியந் .. ... ... | 2 |
| இங்கொருபக் ... ... ... | 22 |
| இங்ஙனங்க ... ... ... | 29 |
| இணைதவிர் ... ... ... | 3 |
| இதனையறி ... ... ... | 16 |
| இந்நிலையனே ... ... ... | 12 |
| இம்மலைசு ... ... ... | 31 |
| இருடி-குமா ... ... ... | 11 |
| இருவருமன் ... ... ... | 5 |
| இலக்கினமி ... ... ... | 8 |
| இவ்விதவரிய ... ... ... | 32 |
| இவ்விதவிபவ ... ... ... | 17 |
| இவரிவ்வா ... ... ... | 24 |
| இன்னவனத் ... ... ... | 3 |
| ஈன்றோர்கள் ... ... ... | 3 |
| உயர்ந்தகோ ... ... ... | 20 |
| உருகுருதந் ... ... ... | 10 |
| எட்டிலக்கத் ... ... ... | 23 |
| எவனொருவன் ... ... ... | 1 |

| | பக்கம். |
|---|---|
| என்றடைந்தரு ... ... ... | 13 |
| என்றுயர்க ... ... ... | 20 |
| எனக்கருதி ... ... ... | 24 |
| எனப்பழிச் ... ... ... | 13 |
| எனவுணர்ந் ... ... ... | 4 |
| எனவுரைத்தக ... ... ... | 26 |
| எனவுரைத்துக் ... ... ... | 16 |
| ஐந்துறழ் ... ... ... | 27 |
| ஒருதினம் ... ... ... | 31 |
| ஒன்பதுவகை ... ... ... | 18 |
| ஓங்குபரா ... ... ... | 16 |
| கண்டடை ... ... ... | 19 |
| கண்டுபின் ... ... ... | 20 |
| கணிதநூல் ... ... ... | 6 |
| கருமத்தாளு ... ... ... | 26 |
| கலியுகவா ... ... ... | 27 |
| கிருபாசித்த ... ... ... | 9 |
| குறுமுனிவ ... ... ... | 22 |
| கூடியசித்தி ... ... ... | 13 |
| கையினிலெ ... ... ... | 6 |
| கொந்தலர்சே ... .... ... | 7 |
| சங்சினிகுச் ... ... ... | 20 |
| சத்யவுலகு ... .... ... | 12 |
| சரியைய ... ... ... | 19 |

| | பக்கம். |
|---|---|
| சித்திைரநதி ... ... ... | 30 |
| சீர்த்தநற் ... ... ... | 32 |
| சீரியஞான ... ... ... | 17 |
| சூரியனட்ட ... ... ... | 8 |
| ஞானமதிக்கே ... ... ... | 9 |
| தக்கிணமுறை ... ... ... | 19 |
| திரைசுருட்டி ... ... ... | 2 |
| துணைகொடுசு ... .... ... | 29 |
| துறவறச்சார் ... ... ... | 18 |
| தென்றிசைசி ... ... ... | 21 |
| தேகநற்சித் ... ... ... | 2 |
| தேர்ந்தவவற் ... ... ... | 4 |
| தேவர்கள்சித் ... ... ... | 18 |
| தேவர்கள்ப ... ... ... | 18 |
| தொகையொடு ... ... ... | 7 |
| தொட்டவொன் ... ... ... | 30 |
| நல்லவேளாண் ... ... ... | 28 |
| நற்காலமு ... ... ... | 5 |
| நான்கிலக்கத் ... ... ... | 32 |
| பரம்பரன ... ... ... | 2 |
| பலதினங்க ... ... ... | 28 |
| பவநோயு ... ... ... | 5 |
| பாவிணைய ... .... ... | 10 |
| பிரத்தியக்கத் ... ... .... | 28 |

| | | | | பக்கம். |
|---|---|---|---|---|
| பின்னர்சா | ... | ... | ... | 9 |
| பூவணைகொ | ... | ... | ... | 1 |
| பெயர்க்குறு | .. | ... | ... | 4 |
| பெருமலையெ | ... | ... | ... | 30 |
| பெற்றனண் | ... | ... | ... | 5 |
| பொதியிலை | ... | ... | ... | 25 |
| போகமார் | ... | .... | ... | 8 |
| மதியுறுல | ... | ... | ... | 8 |
| மலரவன்வ | ... | ... | ... | 12 |
| மலைமுழை | ... | ... | ... | 10 |
| மற்றொருத | ... | ... | ... | 29 |
| மறைவிதிய | ... | ... | .... | 3 |
| முதல்யுகத்தின் | ... | ... | ... | 32 |
| முனிவர்கு | ... | ... | ... | 31 |
| மூலிகைபல | ... | ... | ... | 7 |
| மேலுமூ | ... | ... | ... | 27 |
| மேற்றுவாப | ... | ... | ... | 24 |
| யுகத்தினுக் | ... | ... | ... | 30 |
| வசுதேவனறி | ... | ... | ... | 15 |
| வசுதேவனென் | ... | ... | ... | 15 |
| விரும்பிப்ப | ... | ... | ... | 10 |
| வேளாளக் | ... | ... | ... | 24 |

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 6 | 8 | வகையுளிசுத்தி. | வகையுளிச்சுத்தி. |
| 11 | 8 | கமனக்குளிகை. | கமனகுளிகை. |
| 15 | 15 | சுபதி. | பசுபதி. |
| 16 | 1 | கருணை சித்த. | கருணைச்சித்த. |
| | 2 | வெண்ணிக. | வெண்ணிக். |
| 17 | 4 | இயம்பிகை. | இயம்பிக்கை. |
| 21 | 15 | வேதவத். | நற்றவத். |
| 35 | 9 | பிரும. | பிரம. |
| 51 | 8 | மற்றபக். | மற்றப்பக். |
| | 12 | குவித்துதே. | குவித்துத்தே. |
| | 19 | குணரகித. | குணசகித. |
| 61 | 7 | கல்கார. | கல்லார. |
| 71 | 21 | இச்சித்தவ. | இச்சித்த. |
| 75 | 6 | மூலிகை. | மூலிகைச். |
| | 8 | விதிப்படி. | விதிப்படிப். |

உ

திருச்சிற்றம்பலம்.

# கருணானந்த சித்தர் சரித்திரம்.

## காப்பு.

எவனொருவன் றனையடைந்தார்க்
கிடையூற்றை யகற்றுபவன்
எவனொருவ னடிசார்ந்தார்க்
கென்னலனு மீந்தருள்வோன்
எவனொருவ னுக்கலளித்
தழித்தருள்செய் தொழிலுடையான்
அவனடியுட் கொண்டறைவ
லருள்கருணா னந்தர்கதை.

## நூல்.

1. பூவணை கொளுமா வுறைதிரு நிறத்துப்
பொருளிய துளிநறைத் துளவன்,
றவலி னுபிப் பங்கய வலரின்
றனிச்சுத னெனவரு பிரமற்,
கோவலின் மகிழ்ச்சி விளைத்திடு வளமு
மோங்குறு முயர்ச்சியு முற்றுக்,
காவியப் புலவர் மனத்தினைக் கவருங்
கயவன மென்பதொன் றுண்டு.

2. அவ்வனத்தி னற்புதங்க ளறைந்திடவல்
லவரெவர்தா னவனிதன்னிற்,

செவ்வியபொன் னுலகுறைவோர் பணியுலகில்
வதிவோருஞ் செப்ப வல்லே,
மெவ்விதத்து மென்பாரேல் யானறைய
வல்லுநனே யியம்பக் காதல்,
பவ்வமென வெழுந்துளதா லறைந்திடுவன்
சிலவளங்கள் பரிந்து கேண்மின்.

3. திரைசுருட்டி மணியெறிந்து பக்கலுள
செய்க்குவளை சேர்த்த மதியென்,
றுரைமயங்கி மலர்வாரின் மலர்வித்து
மூழ்குபவர்க் கொருங்கு நான்குங்,
கரைகுறுகி யுட்கொண்டார்க் கொருமூன்றுந்
தொட்டார்க்குக் களிப்பி னாலே,
விரைந்திரண்டு நோக்குபவர்க் கொன்றினையுந்
தருகங்கை விழைந்து சுற்றும்.

4. பரம்பர னருளுறழ் பரந்தநீர் நிலையது
விரைமலர் துறுமிய முதுமர மிகுவது
பொருவரை யருவிகள் புகுந்தழ குறுவது
பரையர னெனப்பயில் பறவைக ளுறுவது.

5. ஆறறி யந்தண ரருங்கிடை யொருபா
லாறறி யோகிய ரமர்குழு வொருபா
லாறறி யறிஞர்க ளாய்வது மொருபா
லாறரி சாதக ரகற்றுவ தொருபால்

6. தேகநற் சித்தியைத் தேடுவ ரொருசார்
வாகுடன் சித்தியின் மகிழ்பவ ரொருசார்
போகிய சித்தியின் புடைவரு பவர்க்கே
யோகைதந் தவர்நோ யொழிப்பவ ரொருசார்.

7. இணைதவிர் குருசார்ந் திட்டிகள் செய்வார்
புணையென வேதம் புகனெறி நடப்பார்
துணையர னடியாத் துணிந்துசிந் திப்பார்
மணைவிணை வெறுத்த மாதவ ருறுவார்.

8. மறைவிதி யங்கியை வேட்டுமோ வுதிகண்
முறையுளி யரற்கீந் துவப்பர்க ளொருபால்
துறைவிரி சமைதமை தூய்வழி யடைந்து
குறையகற் றுறுவரின் குழுவது மொருசார்

9. இன்னவனத் தொருபுறத்து முற்கசதீ
ரம்மெனவே யியம்பிப் பல்லோர்,
முன்னவன்ற னடித்துணையைத் தம்மிதய
முறையுளியே முற்று விக்கும்,
பொன்னனைய வொருதலமுண் டவ்விடத்தே
சமதக்நி புலவர் கோமா,
னென்னருநல் விறும்பூது கொளற்குரித்தா
மிருந்தவங்க ளியற்று வானல்.

10. அவனிரண்டா மாச்சிரமத் தடைந்துபிதிர்
யாகாதி யைந்துஞ் செய்யச்,
சிவனணியு மதியுறழ்நன் னுதலன்றி
யெவ்வகையுஞ் சிவணு ருதென்,
றிவணுரைமேம் படுமிருதிக் கூற்றுணர்ந்தோ
னுதலின லேற்ற வில்லாள்,
பவனமதி லெங்குளளோ யார்மகளோ
வெனநாடிப் பரிந்து வாழ்நாள்.

11. ஈன்றோர்கள் குணமகவுக் கியையுமென
வான்றோர்க ளியம்ப லாலே,
சான்றோர்கள் மகவேயில் லாளாகக்

கொண்டுறைத றகுதி யென்றே
மான்றவறி வினைநீக்கி மாயைநிலை
கைகண்ட மாத வத்தோர்,
கான்றசொன்றி யெனவுலகைக் கண்டவருங்
குணத்தரெனக் கருதித் தேர்வான்.

12. தேர்ந்தவவற் கிரிபுவெனுஞ் சீரியனே
மலக்குறும்பைச் செற்று வாழ்வோ,
ரோர்ந்தவுல குடைப்பொருளும் பவஞ்சமுமே
யென்றுநிலை யமைந்த தன்று,
வோர்ந்தவர்களிவற்றைப்பொருளெனக்கொள்ளார்
சிவமொன்றே யுணரற் பாற்று,
கூர்ந்தகுலக் குரியநடை தவறலென்று
மிழுக்கெனக்கொள் குறியின் மேலோன்.

13. எனவுணர்ந் தவற்கு நலமிகு குமரி
யிருப்பது முணர்ந்தவள் குணங்கண்,
முனைவனை யுளத்தே முன்னலு மவன்றன்
முளரியை யுறழ்தரு வடிகள்,
கனவிலு மறவா தடியவர்க் காணின்
கனிந்துப சரித்தலு மன்றி,
மனையொழுங் கெல்லா முணர்ந்துநா ளுதி
மற்றவு முடையவ ளென்றும்.

14. பெயர்க்குறு பொருளை நடையினுற் சாட்டிப்
பெட்புறச் செய்பவ ளென்று,
முயர்ச்சியை யடைத லெவ்வழி யானு
முறுதியென் றுன்னுவ ளென்று,
மயரற வறிந்து பேசுவித் தவளை
மணந்தனன் மாதவத் தலைவன்,
செயிரிலா ஞான மதியெனுந் திருவுஞ்
சேர்ந்துயி ருடலென வானுள்.

15. இருவரு மன்புட னில்ல றத்தினிற்
பிரிவற வுறையுநாட் பிதிரர் தங்கட
னருமக வினினற லறிந்து காமியப்
பொருவரு தவந்தனைப் புரிதன் மேயினன்.

16. பவநோயு முடனேயும் பாற்றுதலில் வல்ல
பரிவார்ந்த ஞானசித்த மகன்பெறலை நாடிச்
சிவநீங்காத் தவமதனைச் செய்தளவிற் செவ்வன்
றிறம்படநற் கருவடையா ளம்பலவுந் தோன்ற
வவர்க்கி யொளியளிக்கு மமலன்ற னுதர
மமர்ந்துறலா லதிசயித்த வருங்காந்தி யுடலிற்
கவனீங்கக் காணுறவே கண்டவர்க ளெல்லாங்
களிப்புமிக வுற்றமர்ந்தார் காதன்மிகத் தானே.

17. நற்கால முதித்திடவே நறுநுதலா
ஞானமதி நங்கை தானும்,
பொற்காலை முனங்காட்டிச் சிரத்தைப்பினர்
காட்டிவரும் புதல்வற் பெற்றாள்,
தற்காலங் கார்ப்புயலுஞ் சிறுதிவலை
வீசினவாற் றனித மின்றிச்,
சிற்கோல ஞானிகளி னுளமெனவே
யுலகெங்குஞ் சீர்த்த தன்றே.

18. பெற்றனண் மகவை யென்றறி தருணம்
பிதாசம தக்கினி களித்தே,
யுற்றதோர் நிலையை யிற்றென வுரைக்க
வுலகினி லெவருளர் நன்றாத்,
தெற்றெனப் பிதிர ருவப்புறு மாறுஞ்
செல்வன்றன் வளர்நிலைக் கென்று,
மற்றையப் போது செயவல பீச
தானமற் றெவையுமே யாற்றும்.

19. ஆயபின் மகவை நோக்கிய தருண
மருஞ்சுத னவாவுடன் பலநாள்,
போயநட் பார்ந்த பழமகன் வரவின்
போக்கிய நோக்கினைக் கண்டு,
தாயது நம்பாற் சித்தியின் விரிவு
தனிமுத்திச் சுகமெனக் கிளந்து,
வாயிலை யறிந்து தசதினத் தன்று
வகையுளி சுத்தியு மியற்றி.

20. கையினி லெடுத்து மடியினி லிருத்திக்
கவினமை வடிவெலா நோக்கி,
யையம தின்று லிவனுல களிக்க
வவதரித் தவனெனக் கண்ணி,
யையமே முதலா மூவழு தபவே
வரியசோ திடத்தினி லுணர்ச்சி,
வையக மகிழ வுரைத்திடுங் கணித
வல்லரைக் கூய்வின யினனே.

21. கணித நூல் தேர்ச்சி கரையிறந் துள்ள
கணிதர்கண் முனிவனை நோக்கி,
யெணியுரைத் திடுங்காற் றுகையினி லறுமூன்
றினியதோர் வகையது தன்னிற்,
றணிபெறு முந்நூற் றறுபதும் பெற்றுத்
தூய்விரி கணிதமா நோக்கத்,
திணியடை மூவா யிரத்தொடு முந்நூற்
றிருபது சுபவருக் கம்மால்.

22. அச்சுப வருக்கப் பலன்றனை யடைவே
யறைந்திட மாதவ கேண்மோ,
விச்சுப மகவு வுலகெலாம் வணங்கு
முயர்கட வுளர்நிலை யடைந்து

வெச்செனு வுலக முற்றிலு மியங்கு
மேன்மைசால் சித்தியும் பெற்றே,
யிச்சையின் வழியே யாயுளைப் பெறலோ
டேணுறு யோகினை யுறுவான்.

23. மூலிகை பலமும் வன்மைசால் கற்ப
மூலமார் பலமுமே பெற்றுக்,
காலம துறவே மூவகை யுடற்குங்
கண்ணிய வவுடதத் தேர்ச்சி,
மாலினை யெவருஞ் சேர்ந்ததி சயிக்க
மண்ணினும் விண்ணினு நரக,
ஞாலம தனிலு நாவலர் ஞானி
நயந்திட வெங்குமே சரிப்பன்.

24. கொந்தலர்சேர் கருங்கூந்தற் கலைமகளைப்
புணர்மறையோன் குலவு சிருட்டிச்,
சிந்தலில்ச காப்தமதிற் றவாபரத்தி
னிராயிரத்து மும்மூன் றுண்டி.
லைந்துபெரு விருநூறு கோடியொடன்
பதுவிலக்க வறுமூன் றுகுஞ்,
சிந்தலிலா வாயிரத்தோ டொன்பதுவாண்
டாம்பிரமச் சீர்சால் கற்பம்.

25. தொகையொடு நலவாங் கீரச வருடந்
துதைநல மகரமா தத்திற்,
பகரொரு மூன்றுந் திகதியி லொளிசேர்
பகலவன் சுதற்குரி தினத்தி
லிகலொடு வளரும் மதிபரு வத்தி
லின்பவே காதசி யாரற்,
றகையின னுதித்த ததிமுத லாகத்
தக்கமு வொன்பது கடிகை.

26. போகமார் மிதுன விலக்கின மூன்றூப்
புகழ்தரு பாதமாண் கால
மோகையார் சத்வ வேளையும் பானு
வோரையுங் கூடிய காலம்,
பாகமா ரிடப சுக்ரந வாம்சை
பரிந்தருள் சுகந்தனே மிகவும்
வாகமார் மிதுன புதகிரே காணம்
மயக்கொழி சம்பர்க்காங் கிசத்தில்.

27. மதியுறு லக்ந மிடபம தாகு
மாணவாங் கிசைலக்ந மதுவே
துதியுறு சுகிரேக் காணலக் கினமுந்
துன்பொழி மிதுனமார் கடகங்
கதியரு ளிதமா தரிசந லக்நங்
கருதல ருயிரொழி தனுசாம்
வதியம ரோரா லக்கினங் கடக
மதித்திட விவ்வகை வதியும்.

28. இலக்கின மிதுனக் குரியவன் புதனு
மிவனினன் சுதற்குரி யிடத்தி
லலக்கணே யகற்று சுக்கிர னுடனே
யமர்ந்தனன் குருவுச்ச மாக
விலக்கிருண் மதியு மிராறினி லுற்றுன்
விஞ்சிய கேதுவு மொன்றிற்
கலக்கமில் ராகு கலந்துள னேழிற்
கருதிரு மூன்றினிற் செவ்வாய்.

29. சூரிய னட்ட மத்தினி லுறைந்தான்
சூரிய குமரனு மைந்தி
லாரிய விங்ங னமர்ந்துற லாலே
யதிதியின் சுதரம ருலகப்

பாரிய சித்த னென்றறி வுணர்ந்த
பாவலர் செப்பிட வாழ்வன்
சீரிய நினக்கு மாயுளும் பல்கென்
றியம்பினர் செவ்விய கணிதர்.

30. பின்னர் சாத கருமாதி
பிறங்கச் செய்து நான்கின்மே
னன்னர்க் கல்வி நல்கிடுவா
ளுளி லுற்று வாத்தியரை
முன்ன ருணர்ந்த முறைமுற்று
முற்று வித்தான் மூதறிவா
லின்ன நாளிற் றந்தையுமே
யியம்பற் கரிய கதியடைந்தான்.

31. ஞான மதிக்கே யன்னிய
நாமங் க்ருபையென்றே
யூன மிலாதா ருரைத்திட
லாலே யோங்குஞ்சீர்
தானமர் கிருபா சித்தனென்
றியாருந் தரைதன்னில்
வானமும் போற்ற மனமகிழ்
கொண்டு வாழ்ந்தானல்.

32. கிருபா சித்த னென்பதுவே
கேடில் கருணைச் சித்தனென
வரிய வறிஞர் யாவருமே
யறைய விளக்கங் கொண்டானற்
றெரிய வரிய தத்துவத்தின்
சேர்த்த சுத்தி தரிசனமும்
பரிய தத்வ சோதனையும்
பரிந்து வுணர்தற் கார்வுற்றான்.

33. விரும்பிப் பதரி காச்சிரம
மேவி முனிவ ரோடமர்ந்து
கரும சித்தி யோடோக
சித்தி கழறி யுரோமசர்பான்
மருவி காய சித்தியுடன்
மாணு ஞான சித்தியையும்
பொருவி லாத சித்தனெனப்
புகல வுற்ருன் தவம்பன்ஞள்.

34. உருகுரு தந்த கற்பம துண்டே
வுறவுடற் சுத்தியைப் பெற்று
வுரியமந் திரத்தோ டுஞற்றிடத் தவத்தை
யுயர்தவ வுரோமசர் நோக்கி
யிரங்கிய மனத்தோ டழிபசி யொழிக்க
வெணித்தமா லம்மர முற்றுப்
பருத்துய ரடியை வருடியே வந்த
பாலினை யருந்துக வென்ருன்.

35. பாலினை யருந்திப் பவப்பிணி தன்னைப்
பாற்றிடுந் தவத்தினைச் செய்ய,
வாலமர் குருவென் னுரோமசர் கருதி
யாறெண தாரமும் விளக்கி
மாலினை யகற்றக் கதிர்மதி யமுத
மகிழ்பெற வுண்டுநோ யொழித்து,
வாலகு ரியனென் றறைந்திட வுடலின்
மறுவொழித் துயர்ந்தனன் மாதோ.

36. மலைமுழை வனங்கள் வளம்பெற வசித்து
வானரிலும் வதியியல் பினரா,
மலைவகல் சித்த ரீரிரு வகையர்
வாழிடம் போயினர் குளிகை,

மலைவலி யொழிமூ லிகைசித்தி கற்ப
மகிமையை யுசாவியு முரைத்துந்,
தலைமையைத் தரப்பெற் றங்குறை நாளிற்
சவிதிகழ் வெங்குமோங் கினவே.

37. இருடி குமாரர் நால்வர்கள்வந்
தெங்களை யாளற் கிதுததியென்,
றிரந்திடத் தன்னுட னிவர்நால்வ
ரியங்கிடக் கமனக் குளிகையுமீந்
தரந்தை யகற்றுய ரிமசைல
மடைந்துயர் சித்தியை யமர்ந்தீந்து,
தரம்பிறி தில்லாத் தனிச்சித்தர்
சாருய ருலகம துற்றூரால்.

38. அங்குறை தேவ சித்தர்களு
மன்புட னிவர்க்கு முகமன்க,
ளெங்குமி லொளிதிக ழுருவுடையா
யியம்பருஞ் சித்தியில் வல்லவனே
பங்கமில் யோக ஞானங்கள்
பதிபெரு சீரிய பாக்கியமே,
யெங்கள் தவப்பய னிதுவேயென்
றியம்பிசெய் தகுதிக ளுரைப்பாரார்.

39. அணிமா வாதி யெண்வகையு
மடைவே கண்டு களிகூரத்,
தணியா வுவகைச் சித்தருமே
தாங்கு மிந்த்ர லோகத்திற்,
கணியா விந்த்ர னுவப்புறவே
ககன சூனி யாசனத்தே,
திணியார் பத்மா சனமிட்டுத்
திகழ்ந்தான் லேகர் போற்றிடவே.

40. அப்போ தங்கு வாழ்களிறு
மரிய காம தேனுவுமே
யொப்போ தற்கில் கற்பகமு
முயர்சிந் தாமணி மற்றையவுஞ்
செப்ப வியலாப் புகழ்சார்ந்த
சித்தர் கடைக்கண் வழிநோக்கத்,
தப்பி லமுதா சனரிறையுந்
தாங்குஞ் சுரரும் பயமுற்றூர்.

41. சத்ய வுலகுச் சித்தர்களுந்
தக்க விவர்தம் வரவுணர்ந்தே
நித்ய விந்த்ர லோகத்தி
னிகழுஞ் செய்தி பலகண்டு
நித்ய சிவமே நீரெனக்கு
நிகழு ஞான நிட்டைதனை
யித்த தியிற்கூட் டுகவென்றே
யியம்பி நிற்கச் செய்விப்பார்.

42. இந்நிலை யனைத்து மிந்திரன் கண்ணுற்
றியம்பரும் பயத்தினைக் கொண்டு,
செந்நிலை யறியாச் சிறியனேன் செய்த
சிறுபிழை பொறுப்பதுன் கடனென்,
றென்னரு மிரங்க விரந்திடு தருண
மிரங்கியொன் பதுநிதி தமையு,
மன்னிட வவன்பாற் செய்து மாலீன்ற
மலரவ னுலகினை யுற்றூன்.

43. மலரவன் வதிந்த மண்டப மடைந்து
மறைவழிச் சிருட்டியைப் புரியு,
மலரவ நினக்கு வந்தன மென்றே
மாதவ னுலகினை யுற்று

மலரவள் பொறித்த வுரத்தனே நின்றன்
மாவரு டந்திடல் வேண்டு
மலரவம் விருந்தை மிகமகிழ் வென்றே
வாய்மலர் பெரியவ சரணம்.

44. என்றடைந் தருளைப் பலவுருத் திரரோ
டென்றுசூழ் மேருவின் மீது
கன்றடை பசுவென் றன்புடை யார்க்குக்
கனிந்தருள் கரியகண் டன்வாழ்
கன்றலில் கயிலைச் சிகரியை வணங்கிக்
கருணைவா ழிடப்பக்க முடையாய்,
பொன்றலில் புரண புண்ணிய நீற்ற
புரந்தரு ணினதடி யரணே.

45. எனப்பழிச் சிடவே யிறைதரு மருளா
லியம்பரும் வாருணி பெற்று,
மனனடக் குடனே பூசனை யியற்றி
மரபுளி வலந்தனைச் செய்து,
கனந்தரு யோக நெறியினில் ஞானங்
கலந்துபின் முறைவழி யதனை,
யனமென வுட்கொண் டடைந்தனர் செவ்வ
ணுறுடன் பத்துநால் சித்தி.

46. கூடிய சித்தித் திறனெலாங் குயிற்றிக்
குருவரன் றிருவடிக் கமலங்
கூடிய வெண்ண மங்குரங் கொள்ளக்
குமரவே ளீன்றவர்க் கூடி
யாடிய பாத வமலவென் வினைக
ளகற்றிய வரும்பெருஞ் சுடரே
தேடிய மாலிற் ககன்றொளிர் தேவ
தேவவென் றிறைகொடு மீண்டார்.

47. அருவிடை யானின் பிரிவிடை பெற்ற
வருங்குணச் சித்தரு மப்பா,
லுருவிடை சிறிய வுமையம ரிமய
வுயர்பருப் பதமதைக் கிடைத்துப்
பெருமையிற் சிறந்த மாணவர் நால்வர்
பெற்றியை வியப்புறக் கண்டு
வுரிமையின் மற்ற வுயர்தரு சித்தி
யுளவெலா மீந்துவப் பித்தான்.

48. ஆங்கிருந் துயர்ந்த வுலவைகண் மலர்வீழ்த்
தரியகா னனத்தினில் வந்து
பாங்குட னேற்கு முனிவரர் வினையாற்
பரிந்திடச் செய்யுநோய் நீக்குந்
தாங்கிய புகழ்க்கே தாரமு நோக்கித்
தலத்துறை விருடியர் குழூவு
மோங்கிய பிரம ஞானிக ளுலகை
யுவர்த்துயர் குழூவுமே கண்டான்.

49. அக்கிரி யொருசார் வனமுத லாகு
மடைவமர் பொருளிரண் டொன்றுஞ்
சொக்கன வென்று நிலையுடைப் பொருளாச்
சொலுமறை யாகம நாடுந்
தக்கசீர் பெரியர் குழூவுமே தரிசித்
துயர்கதி யிதுவென வுவகை,
யொக்கவோங் கியதை யுணர்ந்திட வுரைக்க
வுவகையின் மிகுந்திட லானான்.

50. அச்சமய மதிகுலத்தி லான்றசீர்
நிலைசூர சேன னென்ன,
வச்சமென வின்றிபயா பதியாகி
யுலகுவப்ப வரசாள் காலம்,

பொச்சமில்பே ரின்புதரும் வசுதேவ
னெனப்புகழ்சேர் புதல்வ னீன்றான்,
கச்சமிலா தோகையெனு மளக்கர்தனிற்
கலந்துகரை காணு தானன்.

51. வசுதேவ னென்பவனு மவன்மனைவி
தேவகியு மதுரை யாளுங்,
கசிந்துமன நெக்குருக லிலாதகொடு
கஞ்சனெனுங் கொடுமை யாள
ஞெசிந்துவளை யிடையுடைய தேவகியின்
சோதரனு யுற்ப வித்தும்
வசிசிறைந்து வெளிவிடுக்காச் சிறைச்சாலை
யிருட்டறையில் வதியச் செய்தான்.

52. வசுதேவ னறிஞரைக்கூய் சிறைச்சாலை
தனைநீங்கி மகிழ்கூர் காலம்,
சுபதிதாண் மறவாத யானடைத
லெப்போது பகர்வீ ரென்னக்,
கசியுமன வசுதேவ கணித்துரைப்பின்
திருமாலுங் கண்டு வக்க,
வசிவடிவேல் விழியவளா நின்மனைவி
யகடுற்று வதிவன் மாதோ.

53. அட்டமியு முரோகணியுங் கூடியநா
ளவதரிப்ப னந்நா ணன்று,
வுட்டதும்பு முவகையினு லுலகுவக்கு
முன்மனது முரைத்தற் கொண்ணுக்,
கட்டமுடை தேவகியின் கருத்துமிகக்
குதுகலிக்குங் கணிதத் தாலே,
யெட்டுணையும் பிசகாது விதந்துரைத்தாஞ்
சுகமுற்று மெய்தி வாழ்க.

54. எனவுரைத்துக் கருணைசித்த ரகன்றப்பாற்
செலவேகி யியற்ற வெண்ணிக,
கனந்தருமா சித்திகளைக் கவின்சிறிது
மில்லாத காளை போல்வார்,
வனநிறைந்த வயோதிகரா விளங்குவித்துச்
சக்குவிலா வயோதி கர்க்கு,
வினனிகர விளங்கிருக ஸீந்துமிவ்வா
றம்பல்ல வியற்றிச் சேர்வார்.

55. இதனையறி பராசரனுங் கருணைச்சித்த
ரடைந்துள்ள வின்ப ஞான,
விதமுணர வாவல்கொடு கலந்துறலு
மனுபவங்கள் வினவிச் செவ்வன்,
கதந்தனைக் கிருக்குகள்சேர்ப் படுங்கால
மிதுவென்னக் கணித்துக் கூறென்
றிதமாக வினவியதற் கிறையாகக்
கணிதத்தா வியம்ப லுற்றார்.

56. ஒங்குபரா சரவுறுவ நினையதிட்டித்
தொருஞானி யுலகிற் றோன்றிப்,
பாங்குபெற வேதத்தைச் சேர்ப்படுத்திப்
பதமாதி பகுத்து நான்காத்,
தேங்குகடற் குவலயத்தி லுதித்தொடுங்க
லின்றியுறை தினஞ்செய் வோனின்,
சாங்கமொடு விளக்குவிப்பா னெனக்கூறிச்
சமீபவனஞ் சார்ந்தா ரன்றே.

57. அங்குள முனிவர் பலருமே கூடி
யரும்பெறற் சித்திக ளாயுள்,
பங்கமில் வேத வுணர்ச்சியின் மிகுதி
பாங்குட னருளுகென் றிறைஞ்சத்,

தங்குறு பல்ல சித்தியி னுடனே
தக்கதோ ராயுள்வே தாதி,
யெங்குள கலையும் வரன்முறை கருதி
யியம்பிகை கூடிடச் செய்தார்.

58. அங்ஙன நிலேத்த வதிசயம் பலவு
மற்புதத் தொடுகெணிற் கண்டார்,
சுஞ்ஞயம் படவே வுரைத்தநற் சுருதிச்
சுகந்தனை வெளிப்படுத் தியதாற்,
செங்கம லப்போ தாயண னெனவே
செப்பிடு நலம்பெற லுற்று,
ரெங்ஙன முரைப்போ மவர்பெரு நிலேயென்
றெண்ணிய வியப்பினி னின்றார்.

59. இவ்வித விபவச் சிறப்பினை யடைந்த
வெழிலிளஞ் சித்தருஞ் சுகமா,
ரவ்விட மகன்று துழனியா ரருவி
யளவில கவின்செயு மந்த்ரச்,
செவ்விய சிகரிச் சாரலேக் கிடைத்துச்
சிதைவிலா வளம்பல கண்டு,
தெவ்விய புலன்க ளடங்கிடு முனிவர்
சித்தரோ டுசாவுவா ரானார்.

60. சீரிய ஞான யோகினேக் கூடிச்
சித்தியுங் கணிப்பில புரிய,
வாரியர் நோக்கி யாச்சுவ லாய
ரரும்பெய ரிடமகிழ் வுற்று,
ரோரிய சித்த ரிவ்வகைச் சிலநா
ளுற்றபின் மேருவை யடைந்து,
தேரிய சீடர் நால்வர்க ளுடனே
திகழ்தரத் தங்கினர் மாதோ.

61. தேவர்கள் பலர்க்கு முறைவிட மாகுந்
திவ்விய மேருவின் சார,
லாவலோ டுறைந்தாங் கமர்பொரு ளாகு
மதகங்கள் பலவுமே கண்டு,
சேவலங் கொடியோன் திருவரு டன்னாற்
செழித்திடு மிவைகளே ஞானப்,
பாவலர் புகழ்வ தாதலி னிவற்றைப்
பற்றலே யுறுதியென் றடைந்தார்.

62. ஒன்பது வகைத்தாம் பாடணங் களையு
முறுதிசெய் துயர்நலந் தந்தே,
யின்பம தருண்மூ லிகைகளை யெல்லா
மெல்லொளி கொடுமிக நோக்கி,
வன்புற மகிழ்ந்து வாழுநாள் தேவ
மருத்துவத் திறத்தினைக் காட்டி,
யன்புறு நாகர் மகிழ்வொடு வழுத்த
வமர்ந்தனர் மேருவின் சாரல்.

63. துறவறச் சார்பின் தூய்மதி யோகைக்
குறுகியே துறவறத் தியலும்,
விறந்திடு ஞானப் பெற்றியு மெடுத்து
விளம்பிடத் தேர்ந்தபின் தேவ,
வறந்தழை சரீர வமைதியுஞ் சித்த
ரரியதே கத்தியல் கூறி,
யுறந்திடு சித்தி தேவசத் தியினு
முயர்வெனச் செவ்வனே நவின்றார்.

64. தேவர்கள் சித்தர் முனிவருங் குழுமிச்
சீரிய விவருறு சித்தி
பாவவன் பிணியை யவிழ்த்திடு யோகப்
பண்புயர் ஞானமேன் மையுமே,

தாவலின் மூன்றுந் தரணியி லெவருந்
தாங்கிய திலையத னாலே,
யாவலை நீக்கி யுறைதரு யாக்ய
வற்கிய ரென்றுபே ருரைத்தார்.

65. தக்கிண முறைவோர் தீக்கரு மத்தாற்
சகிக்கருந் தீயரோ யுறுத,
லக்கண ஞானங் கொடுவெறி சித்த
ரவற்றினைப் பரிகரிக் கெண்ணித்
தக்கவீ ரிருவர் தம்மொடு தானுந்
தக்கவம் மலையதன் றெற்குப்,
பக்கம துற்று ரார்வம துறவே
பகர்வமற் றதன்பினர் நிகழ்ச்சி.

66. சரியைய ரொருபாற் கிரியைய ரொருபாற்
றக்கயோ கியரொரு பாலு
மரியசீர் ஞான வமைதிய ரொருபா
லாகமக் கேள்விய ரொருபால்,
விரிபொருள் வேத விசாரணை யொருபால்
விளங்குப நிடதமாய் வொருபால்,
பரியநல் லிதிகா சம்மொடு புராணப்
பகர்ச்சிய ரொருமருங் குறலும்.

67. கண்டடை களிப்பி னெலதெரி யாது
கருதரு வம்மலை மேல்பா,
லண்டியங் குள்ள விம்மித நோக்கி
யகணித வளர்ச்சிசார் கதலி,
மண்டிய வனத்தி லுற்றுறை சித்தர்
மகிழுதா சனன்மிரு கண்டர்,
மிண்டிய ஞானப் புலத்தியன் சித்த
ராமன்புற் பாணிகோ ரக்கர்.

68. கண்டபின் சித்தர் தலைவன்கோ ரக்கக்
கனந்தரு சித்தரை நேர்ந்து,
விண்டசீ ரவர்தம் சித்தியின் வலியும்
விள்ளருங் காயசித் தியுமே,
யுண்டகற் பங்கள் செய்தநற் றவமு
முடலுறு வெண்கல வொலியுங்,
கொண்டுறு பெயர்க்குத் தகுதியன் றென்றார்
கொள்கரு ணானந்த சித்தர்.

69. உயர்ந்தகோ ரக்க நீயடை சித்தி
யுயர்விலா தாதுவே தியினு
லயர்ந்தது முத்தி நிலைதனை யீயு
மரியவல் லபமதற் கில்லை
மயர்வினை மாற்று மீசத்வ சித்தி
வழிநிற்றன் மேன்மையென் றறைவார்,
துயருறுச் சித்தி யெட்டினு ளேழாந்
தாய்சிவத் துவசித்தி யறைவாம்.

70. சங்கினி குச்சை தக்கசீர்ப் புரோடா
சனியெனுஞ் சத்திமூ விகையின்
பங்கமின் மேலாஞ் சிவகுரு கலந்த
பழுதில் கற்பம்பதி னைந்தென்,
றுங்கமா ராண்டி லுண்டுநல் யோகத்
துரியத்தி னதீதமுங் கண்டு,
மங்கலில் சிவத்தின் மணந்துதன் னிலையை
மறந்தது வாதலே சித்தி.

71. என்றுயர் கருணா னந்தரும் யாரும்
வியப்புற வெடுத்துசொல் யோகப்
பன்னரு நூலின் விரியினைக் கூறப்
பரவிக்கோ ரக்கரென் சித்தர்,

சொன்ன நன்னிலேயி லிருத்துகென் றிறைஞ்சச்
சுடர்தரு வானந்த சித்த,
ரின்னணம் யோகப் பெற்றியென் றியம்பி
யிருத்தின ரதின்மிக வழுந்த.

72. அம்மலே வலமா வந்திடு தருண
மருகுறு பாலிய சித்தர்,
விம்பிய வுவகை கொண்டன ரடைந்து
விளம்பிடு நல்லருள் யோக,
மம்மவீண் டென்ன வவரவர் கருத்தி
னவ்வவர்க் கருள்செயுங் காலஞ்,
செம்மலே வல்ல கார்க்கிய ரென்றே
செப்பியே பெருமித முற்ருர்.

73. ஆங்ககன் றுயர்ந்த கதலிமா வனத்தை
யணுகியே யங்குளர் யோகப்,
பாங்கினைக் கண்டு வேதவத் தான
மெனப்பகர்ந் தரியமா யோக,
வோங்குயர் நிலேயின் மன்னின ரந்நா
ளுடன்வரு வீரிரு சீடர்,
தாங்கிய வுயர்ச்சி யோகநல் வழியிற்
றங்கின ரெனவுல குரைக்கும்.

74. தென்றிசை சிறக்கத் தென்றிசை யுள்ளார்
திவ்விய வுடலினைப் பெற்று,
நன்றியை யுணர்ந்து மாசிவ யோகு
நண்ணவுங் கருதித்தென் றிசையில்
வன்றி மாவன்ன மின்னமு முணரா
மகேசன்ற னிடத்தினு மவர்க்கு,
வொன்றிய மூலப் பொருடனைத் தந்த
வுயர்குக முருகன்ற னிடமும்.

75. ஆய்ந்தசெந் தமிழி னருமையைப் பலரு
மறிந்திடத் தன்பெயர் கொண்டு,
வாய்ந்துயர் வுற்ற விலக்கண நூலை
வாய்மலர்ந் தருளிய விருடி
காய்ந்துல கமர்ந்த வகத்தியர் கலந்த
கவினமை பொதியிலை நண்ணிச்
சாந்துய ரகற்றுஞ் சவிதிகழ் சித்தி
சாற்றியங் குறைந்தனர் மாதோ.

76. குறுமுனி வதியும் பொதியினின் மேல்பால்
குருமுடிப் பவரொரு பாலுந்,
தெறுமிய னவபா டாணமுங் கட்டத்
தேடுவர் மூலிகை யொருபான்,
மறுவகல் பொன்னுச் செயவல வாத
மாட்சிய ரொருமருங் ககன்ற,
வறுபகை யிரிக்கு ஞானிய ரொருபா
லமர்ந்திடு நலந்தனைக் கண்டார்.

77. அகத்திய ரருகி லடைந்தவ ரடிக
ளன்பொடு வழுத்திட வவராற்,
சுகத்தினைத் தருநன் மூலிகை கண்டு
சொல்லரு நன்மைக ளுடையே
னிகத்தினி னல்ல பரத்தினி னடைய
வியல்வல னுயின னென்றே,
பகமல முயலு மாநந்த சித்தர்
பரிந்துமே புகழ்ந்தன ரன்றே.

78. இங்கொரு பக்கல் சிலதின முறைதல்
வேண்டுமென் றெண்ணிய சித்தர்,
மங்கலில் சித்த கிரியெனுஞ் சுருளி
மலையதற் கேற்றதென் றுன்னித்,

தங்கின ரவர்தஞ் சீடர்நால் வருமே
சமைதமை முதலின்மேம் பட்டோர்
பங்கமில் சித்தர் கருணையைப் பெற்றே
பாங்கினி லமர்ந்தியோ குழன்றார்.

79. அம்மலையி லமர்ந்ததின மயன்சகாப்தஞ்
சதமொண் ணூற் றைந்து கோடி
பம்பைம்பத் தெட்டிலக்கத் தெழுபத்தொன்
பதினாயி ரத்தைந் நூற்றிற்
கிம்பர்புகழ் துவாபரத்தி லெட்டிலக்கத்
தறுபத்து மூவா யிரத்துச்
செம்மையவைந் நூற்றிலவ ராயுளையுங்
கணித்துரைத்துஞ் சிறப்ப மாதோ.

80. எட்டிலக்கத் தறுபத்தோ ராயிரத்து
நா னூற்றுத் தொண் ணூற் றொன்றாக்,
கிட்டுறுநா ளச்சுருளி மலைவந்து
கிடைத்ததனிற் கேடொன் றில்லா,
மட்டில்சித்தி பலபுரிந்து வகைப்படுநற்
றவயோகின் மன்னி வாழ்நாண்,
முட்டின்முனைத் தவவலியான் மூன்றாவன்
சித்தர்தமை முன்ன லுற்றான்.

81. அவ்வசியற் கைம்மூன்றோ டிரண்டகவை
முதலாக வையா றீறா,
வவ்வையென வருண்மிகுந்து சித்தியையும்
யோகினையு மடைவே தந்து,
கவ்வைபடு கடலுலகி லுளமருந்தா
மூலிகைகள் கணித்தற் கில்லா,
வெவ்வியவெங் கடுவொழிநன் மருந்திவைக
ளனுபான மிகவுந் தந்தான்.

82. இவரிவ்வா றியற்றிநல முறுநாளிற்
றேரைய ரிளஞ்சிங் கம்போற்
கவர்படுத லமையாத தன்குருவுந்
தானுமிங்ஙன் கலந்திருந்துஞ்
சவலையொழி தன்மருந்து பயன்படுநற்
காலமிது தக்க தென்று,
திவளொளிநூ லான்மருந்தை வெளிப்படுத்தித்
தரணிதனிற் றிகழ்த்த னன்றே.

83. எனக்கருதி யைந்துறழா யிரமென்ருெகை
பெறுநூலொ டென்றும் நன்கா
மனக்குடலி னிலைதனையே யுணர்த்துவிக்கு
நீர்க்குறிநூல் வாய்ம லர்ந்தான்
கனக்கருணை யானந்த சித்தர்மகி
ழிளஞ்சித்தர் கருணை கூர்ந்து
தினைத்தனைக்கா லமும்பயனுக் குவலயத்தார்க்
குறுபழங்கண் தீர்த்துய்ந் தாரால்.

84. மேற்றுவா பரயுகத்தி னெட்டி லக்கத்
தறுபதுமூ வாயி ரத்தோ
டேற்றறுநூ ருண்டதனில் வேளாளக்
குலத்துதித்த வெழிலி போல்வான்
வீற்றறுமுற் பிறப்பினினல் லாசிரியன்
காணுது விரிந்த துக்க
வீற்றுறுமிப் பிறப்பென்னப் பசுமலையிற்
குரவற்கா விருந்து நோற்ருன்.

85. வேளாளக் குலத்துதித்த தனிக்குணத்துச்
சான்றோர்தம் வேட்கை யாறே
மாளாத மருத்துதலை யுளவெல்லா
மவற்குமன மகிழ்ந்து தந்தார்

தாளாலம் மருத்துவருந் தனக்குற்ற
மீளாத சயத்தை நோக்கி
யாளாக நினையாது சித்தர்தமை
மறந்துமிக வகங்க ரித்தார்.

86. அஃதுணர்ந் தெழுந்த சித்தரு மவரை
மயர்ந்தனர் தனதயர் குணத்தா
லிஃதவர் பெற்றி யாயிடின் புடவி
யென்செயா தென்றெணி யவரைப்
பஃறிற முணர்ந்த சித்தர்த மூன்றும்
பகுப்புடைச் சர்ப்பநற் சித்த
ரஃறிறங் கொண்டு மலைந்தழி குகவென்
றறைந்தனர் தவவலி சபதம்.

87. அன்றுதொட் டெதுவுங் கைவரா நிலையி
லமர்ந்தனர் குருமுடி யாம
லென்றென விளங்கு மந்தண குமர
னியம்பரு நலஞ்செயவ் வுகத்தி
லொன்றுட னேழி லக்கம துடனே
யுயரறு பத்துமூன் றுகு
நன்றிசொ ளாயிரத்தெழு நூற்றோ
டைம்பது நிகழுநன் னுளில்.

88. பொதியிலை யுற்று வராகியைக் கணித்துப்
பொன்றலில் தவஞ்செயுங் காலை
நதிபொதி பரமன் பங்கமர் கௌரி
நண்ணிநீ சுருளியென் மலையில்
வதிபெறு சித்தர் குழுவொடு கலந்து
மகிழ்ந்துநின் கருத்தினை முடித்தி
ததியிது தெளியென் றறைந்துமே மறைந்தாள்
தனிமறை யோதுவே தியர்தாம்.

89. அம்மலை யடைந்து கௌரிதன் பதும
வடிமலர் கொண்டுறை காலை
விம்மலை யொதுக்குங் கருணாநற் சித்தர்
விள்ளருந் திருவருட் பெருக்கா
லம்மறை யவற்குச் சிந்தனை போல
வளித்தனர் மருந்துமூ லத்தைச்
செம்மணி யடுத்த யுகத்தினி னூறு
செல்லுகா றிங்ஙனே யமர்வாய்.

90. எனவுரைத் தகன்ற பின்னரம் மறையோ
னியம்பரும் பலமருந் தியற்றி
மனவுணர்ச்சியினு ணேய்மூத னன்கு
மயக்கறத் தெரிந்துநோ யுற்று
ரனையெனக் கருத மருந்தினைக் கொடுத்துப்
புகழ்பொரு ளிரண்டையு மடைந்து
கனகலி யுகவாண் டையிரு பத்து
கடந்திட வுயர்வினி னின்றான்.

91. கருமத்தா னதிபதி யங்கிசத்திற்
கலைகுறைந்து கடையோ னாகி
பெருத்தசுப வருக்கபல மின்றியிருந்
தமையானும் பிரித்தற் கில்லா
விருத்துத்தாங் கிசமதனிற் சனித்தகலைக்
குறைவானு மின்ன வாறே
புரணசித்தி பெற்றுய்தற் கொல்லாத
தன்மையினாற் புகன்றா னங்ஙன்.

92. அநந்தர சன்ம மடைந்துநல் லாயு
ளாயிரு மூன்றுறு காலை
மனந்தர நிலைசே ரந்தணர் ஞான
மன்னுவ ரென்றறி சித்தர்

கனம்பெறு கருணை பெற்றமா ணியினுற்
கருதரு கேரள தேசந்
தினந்தொறுந் தன்ன சித்திக ளுணர்த்தித்
தீதுதீர்த் துய்வகை செய்தார்.

93. ஐந்துறழ் நூறு வருடமு மிங்ங
ஞயபின் மன்னரைக் கொண்டு
சிந்தனைக் கடங்காச் சித்திகள் புரிந்து
சீர்பெறு மூன்றைந் நூ ருண்டு
நந்தலி லாறே ஞாலத்தர் துதிக்க
நவிலரு மேன்மைகள் சேர்ந்து
மைந்தர்கள் பலரு முய்வகைக் காத்தார்
வழியறி கருணையா னந்தர்.

94. மேலுமூ வைந்நூ ருண்டடை காறு
முனிவுறக் கருணையா னந்தர்
தாலமார் வருண விழிவனு லோம
சாதியிற் பிறந்திடு மிருவர்
காலினை யடக்கி யோகுழன் றுயர்ந்த
கவினமை துறவியர்க் கண்டு
ஞாலம்விண் வியப்ப நலசித்தி யியற்றி
நன்மருந் தீந்துமேம் பட்டார்.

95. கலியுக வாண்டு நான்குசேர் சகச்ரங்
கலந்துறெண் ணூற்றெடெண் பத்தும்
வலியுறு மேழுஞ் சேர்ந்துறு நாளின்
மறையறி யந்தணன் சுருளி
மலையடி வார மண்ணியங் குள்ள
மாதவர் தமைச்சித்த ரருகே
கலந்திடச் செய்து ஞானமுங் காணச்
செய்கைவேண் டுவனெனக் கரைந்தான்.

96. பலதினங் கழித்து மாதவர் பலரும்
பரிந்துநன் மறையவர்க் கொடுபோய்
மலவலி நீக்கு கருணையா நந்தர்
மலர்முக முன்னடைந்தி வர்க்கு
நலமுறு கருணை தருதலும் வேண்டு
மெங்களுக் கருள்செய லொக்கு
நிலைபெறு மனத்தீ ரென்றலு மவர்க்கு
நித்தியப் பொருளினை யீந்தார்.

97. நல்லவேளாண் குலத்துதித்த தீரகுண
னொருவன்முன நன்மை சாரம்
பல்லநடை பூண்டுமெர னருளாத
தன்மையினுற் பதியென் றுன்னு
மல்லல்குரு தரிசிக்கா திறந்ததனுற்
பிறப்புறுமவ் வண்மை யாளன்
செல்வம்புகழ் பத்தியினுற் சிறந்திடுவ
னென்றெண்ணிச் சித்தர் தாமும்.

98. அவ்வேளாண் பிறப்புறுநா ளெதிர்நோக்கிக்
கிருபாசித்த ரமர்ந்து வாழ்நாள்
திவ்வியநற் கன்னிலக்நம் வைசேடி
காம்சமுமே சேர்ந்து தோன்று
மௌவியமி லவற்குப்பதி னெட்டாமாண்
டுணர்த்திடவு மையைந் திரண்டிற்
செவ்வியநல் லிறுதிமறு வாண்டின்முதல்
புலப்படுத்தித் திருத்த வெண்ணி.

99. பிரத்தியக்கத் தெய்தியுநற் சாயையெனத்
தோற்றுவித்தும் பிறங்கல் காட்டி
யிரவிலும் வான்மணி வருமெற் பகலினுமே
போதித்துப் பல்ல போகம்

விரவும்வகைப் புரிவித்தும் யுகக்கேற்க
மருத்துவிதம் விளம்பல் செய்து
மரவிறைதாங் கவனிதனிற் றன்னும
மமர்விக்கக் கருதி ஞல்.

100. இங்ஙனங் கருணைச் சித்தருங் கருதி
யிருந்திடு மமயத்திற் கலியிற்
பங்கமி ஞலா யிரத்தொடு தொள்ளா
யிரமெனும் பருத்தவெண் ணுடனே
யங்கமா சேர்ந்த வெண்பத்து வெட்டா
மாண்டினி லருள்பெற வேண்டுந்
துங்கம துடைய சீர்த்தமா ணவகன்
ரேன்றிய நன்மையை யுற்ருன்.

101. துணைகொடு சுருளிப் பருப்பத மடைந்து
தூயர னடிமலர் வழுத்துந்
துணைதவி ரடியார்க் கண்டுமே லுவகை
துய்த்தனன் கண்டதற் கேற்க
விணையிலா வன்ன தானத்தை யியற்ற
வெண்ணிய துணர்ந்தநற் சித்த
ரிணங்கிய குணங்கள் வினைகளை யுடையா
னிவனெனக் கருத்தினுட் கொண்டார்.

102. மற்ருெரு தடவை யருள்செயக் கருதி
மறைந்தன ரருளினர் முறையே
மற்ருெரு தடவைப் பிரபல மாக்க
மன்னினர்வந்தருள் செய்தா
ருற்றவிவ் வாண்டிற் கிடையிலே யிரண்டு
வருடங்க ளாயின நன்ருத்
தெற்றெனச் சித்தர் பின்வரு மாறு
தெளித்துமேம் படுத்தினர் மாதோ.

103. யுகத்தினுக் கேற்க மருந்துகண் மருந்துக்
கேற்கநற் சிகிச்சையுந் தந்து
பகமனம் வருத்து நோயினுக் கேற்ற
சிகிச்சையும் பகர்ந்தபி னல்ல
மகவெனச் சித்த ரொருவரை யுய்த்து
மற்றவன் குடும்பமுந் தனதா
வகங்களி கொள்ளக் கருதிய பிறகு
வேண்டிய வருந்தனந் தந்தார்.

104. தொட்டவொன் றினைப்பத் தெனமிக வளர்த்துந்
துரகத முதற்பரி தந்துங்
கட்டம தொழித்துச் சுகந்தனைத் தருநற்
கண்டெனு மருத்துவ வழியு
மட்டிலா ஞான போகமாம் வகையின்
மன்னிடும் பெருநிலை பலவு
மெட்டுதற் கரிய வின்னண பலவு
மியம்பிமேம் படும்படிச் செய்தார்.

105. சித்திரை நதியின் பாங்கரி லுறையுஞ்
சீரிய வேதுவி னனே
சித்தர்கள் பலர்க ளுறைதலி னனே
சித்தபர் வதமெனும் பேருங்
கொத்தென வளர்ந்த வினைகெடத் தேடுங்
குருமுடிப் பவர்முத லாக
வித்தரை யுறையும் யாவரும் வேண்டு
மியம்பரு மூலிகை யுறலால்.

106. பெருமலை யென்னு நாமமுந் தவத்தைப்
பெட்புற வியற்றிடு பவர்க்கு
விரும்பிய வாறே தவத்தினைக் கூட்டும்
விளக்கத்தின் தவமலை யென்றும்

பரசிவன் விரும்பி வதிந்தருள் செயலாற்
பரசிவ பருவத மென்றுந்
தரையினில் விளம்பிப் புகழவீற் றிருக்குந்
தனிச்சித்த மலைதனை யறைவார்.

107. முனிவர்கள் குழுமி யங்கியை வேட்டு
முழுமுதற் கற்பித்து வேதத்
துனிதவிர் கலையை யோதலி னவற்றின்
துழனியே மிகுந்திடு தலினாற்
பனிமலர் பொதுளுஞ் சோலைசூழ் கிடந்த
பருவதஞ் சுருதிநா கமுமென்
றினமின மாக மனிதர்கள் கூடி
யியம்பிட நிற்பதென் றறைவார்.

108. ஒருதினம் யோகப் பயிற்சியி னொருவ
ரியற்றிய யோகினின் மூன்றும்
பெருமிட மணிபூ ரகத்தினி னுதம்
பிறங்கிட மலையடி யுற்றோன்
வரவினை யறியா தச்சமீக் கொண்டு
மானுடல் சுருங்கிடப் பெற்றான்
பரபரப் புடனே யுற்றசுற் றத்தார்
பக்கம தடைந்துநோக் கினரால்.

109. இம்மலை சுருளச் செய்தகா ரணத்தாற்
சுருளியென் றியம்பலே தகுதி
பம்பிய பெரியீ ரெனவபி தானம்
பகர்ந்தன ரன்றைய தினத்தில்
வெம்புத லில்லாப் பலபெரி யோர்கள்
விளம்பிய மருந்தினைத் தந்து
நம்பிய வவற்குச் சுருடலைப் போக்கி
ஞானமுங் கலந்திடச் செய்தார்.

110. இவ்வித வரிய பெருமைக ளுற்ற
விணையிலாச் சுருளியென் மலையி
லவ்விய மவித்த கருணையா நந்த
சித்தரு மமர்ந்துபல் சித்தி
பவ்வம தெனவே பரம்பரன் போலப்
பக்குவம் பார்த்தருள் செய்வன்
றிவ்விய சித்தர் வல்லமைத் திறத்தின்
செய்தியை விளம்பயார் வல்லர்.

111. நான்கிலக்கத் திருபத்தை யாயிரத்தின்
மேலாக ஞாலந் தன்னி
னுன்குமா ணவர்களுக்கு ளொருவரையிங்
கிருத்திசித்தி நவிலக் கூறி
மான்பெறுகை மாதேவன் மலரடியை
மாணவகன் மலர்செய் நெஞ்சிற்
கான்பெறவே பதிப்பித்துத் தன்பெயரீந்
தருள்செய்து கவின்வன் மாதோ.

112. முதல்யுகத்தின் முழுமுதல்வாழ் கயிலைதனைக்
கருணைச்சித்தர் முன்னு வாரா
விதம்பெறவு மெவ்வளனு மெய்திடவுங்
கருணைச்சித்த ரிணையாம் பாத
பதுமமலர் கொண்டவுளத் தவர்பெரியோ
ரவரேதாம் படைத்த லாதி
கதுமெனவே வியற்றிடுநற் கடவுளரென்
றறிபெரியோர் கழறு வாரே.

113. சீர்த்தநற் சுருளி மலையெனுந் திவ்ய
சிகரியும் வாழ்குக நன்று
வார்த்தபே ரன்பர்க் கருள்செயுங் கருணை
யாநந்த சித்தரும் வாழ்க

பார்த்தநற் பெரியோர் தனமுத லான பருப்பொரு
ளுடனிதைக் கேட்டோர்
வார்த்தன மாதர் மகமுதலான
வளத்தையும் பெற்றுவாழ் குகவே.

முற்றிற்று.



உ

ஸ்ரீரஸ்து.

கடவுள் துணை.

# கருணானந்த சித்தர் சரித்திரம்.

---

அநந்த குண கல்யாண வியாபகராய் ஆதி மத்தியாந்த ரஹிதராய் சகல லோக சரண்ணிய ராய் விசுவசேவியராய் சகல லோக ஜீவாதார பூத சகல ஜீவரக்ஷகராய் ஷாட்குண்ணிய பரிபூர ணராயுள்ள திருமாலின் நாபிகமலத்திலிருந்து தோன்றிய ஹிரணிய கருப்பனது சிருட்டி சகாப் தத்தில் துவாபரயுகம் வருடம் 2009-க்கு 195 கோடியே 50 லக்ஷத்து 18 ஆயிரத்து 9 ஆண் டாகிற பிருமகல்பத்தில் கங்காநதி பாயப்பெற்ற தாய்க் கடவுளின் தண்ணளிபோலக் குளிர்ந்தநீர் நிலைகளை யுடைத்தானதாய் மிகச்செழித்துந் தழைத்தும் பூத்துங் காய்த்தும் பழுத்தும் ரமணீய மாயிருக்கின்ற தருமங்களால் சூழப் பட்டுத் தவத்திற்குப் பெருந்துணையாய்த் தவஞ் செய்வோர்க்காகரமாய் யோகஞ்செய்வார் ஒரு பாலும் அருமறை விதித்தபடி யங்கிவேட்டமரர் நாதனுக்காகுதி யளிப்பார் ஒருபாலும், புலன் களை யொடுக்கித் திரிகரணங்களை யொருக்கி மனத்தை யொருவழிப்படுத்தி வேறு கருதாது இறைவனருள் வேண்டி நிற்பார் ஒருபாலும் இயம நியமாதி யட்டாங்கங்களோடு ரேசக பூரக

கும்பகங்களால் மூலாதாராதி இடங்களாறினும் ஆரோகணித்துப் பரமாநந்த மூர்த்தியின் அங்குட்ட வடிவத்தை யாஞ்ஞாத்தானத்திற்கண்டு காண்பான் காட்சி காட்சிப்படு பொருளென்கிற மூன்றுமின் றித்தாதாத்மீக வுணர்வோடு ஆனந்தமயமாகிச் சவிகற்ப சமாதியிலிருப்பவர் ஒருபாலும் நிருவிகற்ப சமாதியிலிருந்து சகச நிஷ்டையின் இன்பத்தை நுகர்வோர் ஒருபாலுங் காயசித்தியைக் கருதித் தக்க மூலிகைகளைச் சித்தர்பால் பெற்றுண்டு நரை திரை மூப்புக்களை யொழித்து என்றும் ஒரே விதமாக வுடலைநிறுத்தித் தூல சூக்கும காரண சரீரங்களைத் தன் மனம்போல வசப்படுத்தி யியக்குமாற்றலோடெல்லா வுலகங்களிலுஞ் சஞ்சரிக்குஞ் சித்தியைக்கொண்டு கரும தோஷங்களால் அவயவக் குறைவை யடைந்து வருந்துகின்ற சீவகோடிகளைக் கண்ட விடத்துத் தண்ணளியினனும் மிகுந்த தயாவுடைமையாலு மவர்களுக்குள்ள வுடற்குறைகளை நீக்கிப் பங்கு குறளாயினர்க்கு அவற்றை நிவர்த்தித்துத் தீராநோய்களைத் தீர்க்கும் மருந்தினல் கரும ரோகம் சம்பந்தரோகம் முதலிய ரோகங்களைத் தீர்த்தலையே விளையாட்டாகக் கொண்டு சஞ்சரிக்குஞ் சித்தர்களொருபாலும் வதியப்பெறுவதும் சுரர்களொருங்குகூடி வாழப்பெற்றதும் மன்னர்கள் தவஞ்செய்து வரம்பெறுவதும் பகீரதன் கங்கை கொண்டுவரத்தவஞ்செய்ததும் சாம்பூநத நதியின் வட

பாலிலிருக்கின்றதும் ஆகிய பெருமையது கஜா ரணிய மென்னும் தபோவனம்.

கஜாரண்யத்தில் முற்கசதீரத்தில் தவத்தை யே தனமாகக் கொண்டு உலகும் உலகுடைப் பொருளும் நித்திய மன்று அழிந்துமீட்டு மவ் வாறே தோன்றுந்தன்மையை யுடையன இவ் வுலகு முலகுடைப் பொருளும் மாயா காரியங்க ளாக வுள்ளன. இவை பாசவறிவை விளைப்பதன் றிப் பதியை யறியுமறிவை யுண்டுபண்ணு ஆதலி னிவற்றைப் பொருளெனக் கருதலறிவன்று. என்றுமுள்ளதாய்ப் பாசத்தை மோசனஞ்செய்வ தாய்ப் பிறப்பிறப்பற்றதாய்த் துரியங்கடந்ததா ய்ப் பரநாத மூலத்தலத்து முளைத்ததாய் மோன பராநந்த முத்திக்கிறையாய் வித்தின்றி முளைத்த விமலமாய்ப் போக மோக்ஷத்திறையாயெங்கு நிறைந்ததா யெல்லாமறிந்ததாய்ப் பரிபூரணாநந் தப் பிழம்பாயுள்ள பரமபதியை யறியும் ஞானத் தையுணர்ந்து பதியையகக் கண்ணாலும் புறக்க ண்ணாலுந் தரிசித்து அவன் திருவருளுக்காளாகி அழியாச்சுகத்தைப் பெற்றின்புறுவதே யித்தே கம் பெற்றதின் பயனெனக்கருதி யுலகப்பற்றற் றுச் செய்யுங் கருமங்கள் யாவையும் ஈசுரார்ப்ப ணஞ் செய்து தங்குலத்திற்கு விதித்த சற்கரு மங்களைச் செய்யாத வழிக்குலங் குறையும் சித்த சுத்தி கெடும் அஞ்ஞானம் வளரும் ஞானங்தேயும் ஆதலால் நியமித்த கருமங்களை நியமித்தவாறே நிஷ்காமியமாகச்செய்து முடிப்பதுதான் சுத்த

ஞானம்பெற்று அதன்வாயிலாகப் பரமபதியைக் கண்டானந்திக்கு முபாயமென வுணர்ந்தவராய்த் தங்குலத்திற்கேற்ற வேற்றமும் ஒழுக்கமு முடையராய்த் தமதாச்சிரமத்திற்கொரு கோச தூரத்தில் ஆச்சிரமமமைத்துக்கொண்டு தவஞ் செய்து வந்த தபோதனராகி யரிபுவென்கிற வபிதானத்தையுடைய மகரிஷியின் குமாரியும் ஞானமதி யென்கிற திருநாமத்தையும் பெண்களுக்குரிய அச்சம் நாணம் மடம் பயிர்ப்பென்கிற நால்வகைக் குணங்களையும் விருந்து புறந்தரல் வேள்விக்குரிய வுபதிரவியங்களை யமைத்தல் மந்திரயந்திரங்களை யாக்கல் பெற்றதைக் கொண்டுவத்தல் அவாவின்மை யின்சொற்கூறன் முதலிய வுத்தம குணங்களையு முடையவளுமாகிய கன்னிகையைச் சுருதிகூறிய மணவினைப்படி வேள்விசெய்து அங்கி சான்றுகப் பாணிக்கிரகணஞ் செய்து இல்லற வொழுக்கத்தை யுடையவராய்த் தவஞ்செய்து வந்தனர் ஜமதக்கி முனிவர்.

இம்முனிவர் தவஞ் செய்துவருங்காலத்தில் இல்லறத்திற்குரிய கருமங்களிற் சிறிதும் வழுவாது பிராஹ்மண தரும கருமங்களிற் சத்திய புத்தியோடொழுகும் நாள் மிருதிகூறிய வாறு பிதிரர் கடனைத் தீர்க்க வெண்ணி யிதுநந் துணையன்று இறையருளின் வழியாயது ஆதலால் ஜன்மரோகத்தையுஞ் சரீரரோகத்தையு

நிவர்த்திக்கத்தக்க ஞானசித்தனுகிற வொரு குமாரனுதிக்கக் கடவுளைக் கருதிக் காமிய தவத்தைச் செய்யவேண்டுமென்று செய்து வருவாராயினர். அவரவ்வாறு காமியதவஞ் செய்து வருங்காலத்தில், தியானப்பொருளாகிய தேவ தேவன தருளால் ஞானமதியார் கருவுற்றனர். கருவுற்ற காலத்திலேயே ஜமதக்நி முனிவரின் மனைவியாரது தேகத்தில் கண்டோர் வியக்குங் காந்தி யொன்றுண்டாயது. கருப்பச் சின்னங்களுண்டாயின. முனிவர் மனைவி கருவுற்ற விநாடி தொடங்கிக் கடவுளைத் தியானித்துலகிற்குக் களைகணுகிய வோருத்தம புதல்வ னுதிக்குமாறு வேண்டி வந்தனர். வேண்டியவாறு பசுபதியின் றிருவருளா லுத்தம முகூர்த்தத்தில் பலவிருடி மனைவியர் சூழ்ந்து நிற்கக் கால்முன்னுஞ் சிரம்பின்னுமாகக் குழவிவர ரிபுவின் குமாரியார் வயாவின்றிப் பிரஸவித்தனர். அப்பொழுது மேகங்கள் உபாயமாக நல்லநீர்த் துளிகளைச் சிதறின. தென்றல்வீசி யாரோக்கியத்தை யுண்டுபண்ணிற்று.

ஜமதக்நி முனிவரின் மனம் அளவிறந்தகளிப்பையடைந்தது. அவர் உடனே பிதுருக்களையும் குழந்தையையுமுத்தேசித்துச் செய்யப்படும் வைதிக கருமங்களைச் செய்யும் பொருட்டு நதிக்குச்சென்று மூழ்கிவந்து வேதவிதிப்படித் தானங்களைச் செய்து தன்னருமைக் குமாரன்

முகத்தை நோக்க வக்குழந்தை பலகாலமாகப் பழகியவர்களை நட்புமிகுதியால் சிறப்பாக நோக்குவது போலப் பார்ப்பதைக் கண்ணுற்று இது எங்குலஞ் செய்த தவமேயோ அன்றி இத்தேயஞ் செய்த பாக்கியமோ அன்றி யான் பல பிறப்பிலுஞ் செய்த தவத்திரளோ அன்றிச் சித்ததெய்வமோ என்று வியந்து எல்லாம் பசுபதியின் திருவருளேயென்று சிந்தித்து மகிழ்ந்திருந்தனர். குழந்தை யுதித்துப் பத்துத் தினங்களுஞ் சென்றன. பிரஸூதிகாக்கிருக சுத்தி சரீர சுத்திக் கேதுவாகிய புண்ணியாகவாசன முதலிய வைதிக காரியங்களைச் செய்து முடித்தபின்பு பாலகனைக் கரத்தாலெடுத்து மடிமீதிருத்திச் செவ்வையாக வடிவமுற்றையும் பார்த்தருளினர்.

பின்னர்ச் சோதிடரை யழைத்து உசாவினர். அவர்கள் தொகையால் பதினெட்டும் வகையால் முந்நூற்றறுபதும் விரியால் மூவாயிரத்தறுநூறுமாகிய சுபவர்க்கங்களுள் விரியால் மூவாயிரத்து முந்நூற்றிருபது சுபவர்க்கம் பெற்றுக் கோள்களிருத்தலால் இக்குழந்தை யுலகுக்குத் தெய்வமாகி யெவ்வுலகங்களிலுஞ் சஞ்சரிக்கத்தக்க சித்தியையும் தனக்கிஷ்டமான காலம் வரையிலிருக்கக் கூடிய வாயுரபிவிருத்தியையும் நிமிடகாலத்தையும் பல வருடங்களாக வளர்க்கக்கூடிய யோக சித்தி

யையும் சரீரத்தைப் பொன்முதலிய உலோகங் களைப்போல விறுகச்செய்யும் மூலிகை பலத் தையும் ஸ்தூலவுடலைத் தூலம்போல விலேசாகச் செய்யும் கற்ப பலத்தையும் இளமையிலேயே பெற்றுப் பரமசித்த புருடனுய்ச் சுத்த மாயா தத்வ தேகிகளாகிய விண்ணுலகவாசிகளினுட லிற் கேற்றதும் அசுத்த மாயா சரீரிகளாகிய மனிதசரீரத்திற் கேற்றதும் சுத்தா சுத்தமாயா சரீரிகளாகிய நரகலோக வாசிகளுடைய சரீ ரத்திற்கேற்றதுமாகிய பற்பல அவுடதத் தேர்ச் சியையுடையனு யிருப்பனென்றுங் கூறினர்.

பின்னரும் அச்சோதிடமுணர்ந்த முனிவ ரர் ஜமதக்கினி முனிவரைப் பார்த்துச்சோதிட சாத்திரப்படிப் பிரமசகாப்தம் வருடம் 195 கோடியே 50 லக்ஷத்து 18 ஆயிரத் தொன்ப திற்குத் துவாபரயுகாப்தம் இரண்டாயிரத் தொன்பதில் நிகழாநின்ற ஆங்கீரஸவருடம் மகரரவி மூன்றுந்தேதி ஸ்திரவாரம் சுக்கில பக்ஷம் ஏகாதசிதிதி கிருத்திகா நக்ஷத்திரம் அமி ருதயோகங்கூடிய சுபதினத்தில் சூரியோதயாதி நாழிகை இருபத்தேழுக்கு மிதுனலக்கினம் மூன்றும் பாதத்தில் புருஷகாலத்தில் சாத்விக வேளையில் சூரியவோரையில் இடபசுக்கிர நவாம்சையில் மிதுனபுததிரேக்காணத்தில் சம் பர்க்காம்சத்தில் உமது குமாரன் ஜனனம். ஜாதகனுக்கு ஜன்மலக்கினம் மிதுனம்.

சந்திர லக்கினம் இடபம். நவாம்சலக்கினம் இடபம். திரேக்காணலக்கினம் மூன்றாவதாகிய மிதுனத்தில் துவிதீயபாதமாகிய கடகம். ஆதரிசன லக்கினம் தநுசு. ஹோராலக்கினம் கடகம், இலக்கினம் மிதுனம் அதற்குரியவன் வித்தியா மாதுல காரகனாகிய புதன், அவன்பாக்கியத்தில் மந்தக்ஷேத்திரத்தில் பஞ்சம விரயாதிபதியுங் களத்திரகாரகனுமாகிய சுக்கிரனோடிருக்கிறான். ஸப்தம தசமாதிபதியும் போக, யோக ஜீவன புத்திரகாரகனுமாகிய குருதனத்திலுச்சனாகவிருக்கிறான். தனாதிபதியும் மாதுருகாரகனுமாகிய சந்திரன் பன்னிரண்டிலுச்சனாக விருக்கிறான். ஜன்மத்தில் ஞானகாரகனாகிய சிகியிருக்கிறான். ஸப்தமத்தில் இராகு விருக்கிறான். ஷஷ்டலாபாதிபதியும் சகோதரகாரகனுமாகிய குஜன் ஆறிலிருக்கிறான். மூன்றாமாதிபதியும் பிதுர்காரகனுமாகிய ரவி அட்டமத்திலிருக்கிறான். அட்டம பாக்கியாதிபதியும் ஆயுள்காரகனுமாகிய சனி ஐந்திலுச்சனாகவிருக்கிறான். ஆதலால் சுபவர்க்கங்களால் மிகச்சிறந்த இந்த ஜாதகன் தேவசித்தனாய்த் திரிலோக சஞ்சாரியாய் அனேக அற்புதங்களை யெல்லாம் பற்பல புவனங்களிலியற்றிப் பெரிய புகழோடும் மகோபகாரியாய் வாழ்வானென்று கூறினர்.

பின்பு ஜாதகர்ம நாமகர்ம அன்னப்பிராசன சவுளங்களாகிய கருமாக்களைச் செய்தற்கு

விதித்தபருவங்களிற் செய்துமுடித்து ஐந்தாவது ஆண்டின் தொடக்கத்தில் வித்தியாப்பியாசஞ் செய்வித்துத் தாமுணர்ந்த கல்விகளை யெல்லாம் போதித்து வரு நாள்களில் ஒருநாள் ஜமதக்கினிமுனிவர் பரமசிவதிருவருளால் சிவசாரூபமுற்றுப் பதமுத்தியடைந்தனர். ஞானமதியாகிய கிருபையென்பவள் வயிற்றிற் பிறந்தமையால் கிருபாசித்தனென்றும், ஜமதக்னிகுமாரனுதலால் ஜாமதக்னியென்று மபிதானங்கள் அக்காலத்தில் ஜமதக்னிகுமாரருக்கு வழங்கப்பட்டன. பின்பு அவ்வடமொழிப் பெயரே தென்னுட்டில் கருணைச்சித்தனென்று வழங்கலாயது. பிறகிக்கருணைச்சித்தர் தந்தை சுரர்க்கிறைவனுலகம் புக்க பின்னர் தான் தத்துவவிசாரமுந் தத்துவசோதனையுந் தத்துவதரிசனமுந் தத்துவசுத்தியு மறிய விரும்பிப் பதரிகாச்சிரமத்தில் பஞ்சாக்நி நாப்பண் பற்பல சுரமுனிவரோடமர்ந்து கருமசித்தி யோகசித்தி யென்கிற விருவகைச் சித்திகளையும் விரும்பி வந்தடைந்த முனிவரார்க் குபதேசித்துச் சித்த நாயகமாய்ப் பல பிரளயங்களைக்கண்டு பிரபஞ்சநாசத்தையும் மீட்டுந் தோன்றுகிற முறையையும் பிரத்தியட்சத்தி லுணர்ந்து நெடுங்காலம்வாழும் சிவ சித்தராக உரோமசரிருப்பதை யுணர்ந்து அவரிடந் தத்துவ வாராய்ச்சி செய்வான் சென்றனர். அவ்வுரோமசர்அவரது தோற்றத்தையும் முகம் சிரம் கரம் பாதம் முதலிய வுறுப்புக்களி

லுள்ள ரேகை சுழி முதலியவற்றையுங் கண்ணுற்று இவரஷ்டமாசித்தியையு மவற்றினுட்பிரிவையுங் கைக்கொண்டு ஞானசித்தராகி யெல்லா வுலகிற்கும் நன்மைபுரியும் நாயகமாவாரென்றறிந்து முன்னர்க் காய சித்தியைப்பெறுதற்குரிய கற்பத்தை நன்னுள் கொண்டு கொடுத்தனர்.

அவ்வாறு அவரளித்த கற்பத்தை யுண்டொருவாறு சரீரசுத்தியைப் பெற்றுச் சித்திக்குரிய மந்திரோபதேசத்தோடு தவஞ்செய்து வரும்பொழுது உ.ரோமசர் அவர் தவத்தைக் கண்டு மனமிரங்கி மிகுந்த தயவுடையவராகிப் பசிப்பிணி யொழிக்கக்கருதி அழைத்துச் சென்று பற்பல மூலிகைகள் இடையிடை வனமத்தியிற்களுலிநிற்க நடுவண் சிவபிரான் நேத்திரம் போல முக்கவடாய்த் தழைத்துள்ள வொருதமால விருக்ஷத்தின் அடியிலழைத்துச் சென்று கையால்வருடி மத்தியி லொருகிளையையொடிக்க வதிலிருந்து பாலொழுகியது. அப்பாலே யிருகையாலு மேந்திக் குடிக்கும்படி யுத்தரவு செய்ய வவ்வண்ணமே யேந்திக் குடித்தனர். குடித்தமாத்திரத்தே பசியொழிந் துண்டவர் போலச் சுகம்பெற்றுத் தவத்தில் மனவூக்கத்தோடு இரவு பகலென்னும் வேற்றுமையின்றித் துயிலுணவுமின்றி யோகம் பயிலவெத்தனிப் புழியுரோமசர் அதைத்தெரிந்து இயமநியமாதி

யட்டாங்கங்களையும் அசபாமந்திரத்தையும் அசபாசெய்கையையும் மூலாதாராதி யாறு தானங்களையும் பிலாவனம் பிலேசனம் பிண்டீகரணம் முதலிய செயல்களையும் ஆதாரதெய்வங்களையும் பிராணாயாமத்தையும் உச்வாஸ நிச்வாஸசங்கையையும் சூரியசந்திரநாடிகளின் மாத்திரைகளையும் அவற்றின் பேதத்தையும் ரேசகபூரக கும்பகக் கிரியைகளையுங் கரதலாமலகம்போல வையமின்றிப் பசுமரத்தறைந்த வாணிபோல வுளத்திற் பதியுமா றுபதேசித்தனர்.

அவர் அவ்வா றுபதேசிக்கவே யோகாசனமும் யோகமுத்திரையு முடையவராய்ப் பத்தியோகம், அடயோகம், கருமயோகம், அங்கயோகம், இராஜயோகம் மகாயோகம், சித்தயோகம், சிவயோக முதலிய வெல்லா யோகங்களையு முடையராய்ச் சகலநிஷ்டை கேவலநிஷ்டை சகல கேவல நிஷ்டை சகசநிஷ்டை சமாதிநிஷ்டை மகாநிஷ்டை முதலிய நிஷ்டா சுகங்களையெல்லாங் கூடிக்கூடி நுகர்ந்து யோகப் பயிற்சியால் லலாடமத்தியிலுள்ள மதிமண்டலத்தமுதைப் பெருக்கி யுண்ணுந் திறமுடையவராய் நோயாலழியாத் தேகமுடையவராய் அசுத்தமாயையின் தோற்றமாகிய தனதுடலைக் கற்பங்களாலும் வாருணிமுதலிய சிவமூலிகையாலுங் கற்பூரம்போலச் சுத்தமாக்கிச் சேடப்பொருளின்றிச் சுத்த மாயா சரீரமாக்கி யொளிவிர

வச்செய்து துரியாதீத மூர்த்தியாகிய சுத்தபரி பூரண சச்சிதாநந்த மூர்த்தியினிடத்து அபேத மாகிய முத்தி பெறுதற்குரிய ஆநந்தமய கோச மாக வன்ன மய கோசத்தைச் சித்தியாற்கண்ட மகாசித்தராகித் திகழ்ந்தனர். இவ்வாறு நிகழு நாள்களுள் கருணாநந்தசித்தர் மலைக் குகையிலும் மலைச்சாரலிலும் வனங்களிலும் வானுலகத்தி லும் வசிக்கு மியல்பினராகிய கருமசித்தர், ஞா னசித்தர், யோகசித்தர், தேவசித்த ரென்கிற நால்வகைச் சித்தர்கள் வசிக்குமிடங்களிற் செ ன்று அவர்களுடைய கற்பங்குளிகை மூலிகைச் சித்தி முதலியவற்றை யறிந்து அவரோடு உசா வித்தனது திறத்தைக் காட்டிக்கொண்டு ஆங் காங்குச் சென்று வந்தனர்.

பின்பு இவர் மகிமை முற்றுமுணர்ந்த நால் வர் இருடிகுமாரர்கள் அவரிடத்தி லுங்களும் யோக ஞானசித்திகளைப் பெறும் பொருட்டு வுடலைவிட்டுப்பிரியாத நிழலைப்போல வொருங்கு தொடர்ந்தனர். சித்தர் இந்நால்வருந் தன்னோடு கூட வருதற்குரிய கமன குளிகையைக் கொடு த்துடன் வரச்செய்து இமாசலத்தின் வடசாரலை யடைந்து மாணாக்கர் நால்வரையுங் கற்பசாத னத்திலிருத்தி யட்டமாசித்தியின்ப நுகர்தற் குரிய சித்தியை மெய்பெற மூலிகைகளைக்கொடு த்துத் திரிகால வுணர்ச்சியைப் பெறத் தவத்தி லிருத்தித் தான்மட்டுஞ் சித்தலோகஞ் சென்

றனர். அங்குள்ள தேவசித்தர் குழாங் குழா மாகக் கூடிக்கொண் டிரவித்திரள்போல வொளி விராவி நிற்குங்காட்சியைக்கண் டற்புதசித்த ராய் விம்மிதமடைந் தானந்தத்தோடு அக்குழாத் திடைப் புக்கனர். அங்குச்சித்தநாயகம் பூண் டொழுகு மாரியசித்தர் இவர்முகநோக்கி யிவ ரது யோகச்சால்புந் தவச்செறிவும் ஞானத்தின் நிறைவும் அவுடதவலியுஞ் சித்தித்திறமும் உண ர்ந்து அவரை வருகவெனமுகமனுரைகூறி யிரு கையாலு மிறுகக்கட்டித் தழுவினர். உடனே யங்குக் குழாங்கொண்டிருந்த சித்தர் பலரு மிவ ரிடத்தில் வந்து வணங்கி யிவரது தேஜோமுகத் தையுஞ் சரீரவன்மையையு முணர்ந்து நிரம்ப வியப்படைந்தவர்களா யிவரது சித்தித்திறத் தைப் பரிசோதிக்கக் கருதி யிவரிருந்தவிடத்தி லிவரை யெல்லோரு மொருங்குகூடி யுபசரிப் பார் போன்றிருகரத்தாலு மெடுக்கச் சிறிது மசைக்க முடியாமல் மலைபோன்றிருந்தமையை யுணர்ந்து நாணி வாளா விலகினர். பின்பு மற்றொ ருபக்கத்தில் மிகப்பருத்துயர்ந்த தேகத்தோடு வீற்றிருப்பதைக்கண்ட வேறு சில தேவர் இவர் வலியவுருவுடையார் எடுப்பது மிகக் கஷ்டம் என்று பேசிக்கொண்டுவந்து பல ரிவரைத் தூக்க இலேசாகப் பஞ்சுபோலிருப்பதைக்கண்டு வியப்புற்று இவர் சித்தி யிருந்தவாறென்னே யென்று பல பாராட்டி வியந்தனர். வேறுசில ரிவ ரொருகையிற் கட்டங்கமும் வேத்திரமு

மற்றொருகையிற் பூதிப்பையு முடையவராய் முண்டித சிரத்தோடு திருநீற்றொளி பழுத்த மேனியராகி வருதலைக்கண்ணுற்றிவ ரெவ் வுலகச் சித்தரோவெவ்வகைச் சித்திகைவந்த வரோ வெனப்புகழ்ந்தனர். இவ்வாறு பல சுரர் புகழச் சித்தவுலகத்துஞ் சுரருலகத்துஞ் சென் றெவ்வோரிடங்களிலுந் தனது சித்தவலிமை யைக் காட்டிக் கண்டோரை வியப்பித் தாங்கு ள்ள புண்ணியப்பொருள்களைக்கண்டு மகிழ்ந்து இந்திரவுலகம் புக்கனர். அங்குள்ள விந்திரனி வரைச் சித்தரென்றுணராது காமிய சிவபூசை யினு லெய்திய புண்ணியத்தாலிங்குவந்த வொரு பத்தனென் றெண்ணிக் கவனிக்கா திருந்தனன். அதை யுணர்ந்த சித்தரவன் சிறுமையையுந் தன்னுயர்வையு மவன்முன் நிராசனர் வியக்கும் படிக் காட்டக் கருதி வசித்துவசித்தித் திறத் தோடாகாசத்தில் சூனியாசனத்தில் பத்மாசன மிட் டெட்கார்ந்தனர். அப்பொழுது கற்பக விரு ட்சங் காமதேனு சிந்தாமணி சங்கநிதி பதுமநிதி முதலியநவநிதிகளும் ஐராவதமென்னுந் தெய்வ யானையு மிவரைச் சூழ்ந்தேவல்வழி நின்றன. புரந்தரனைக் காணக்கையுறையோடு வந்த வமு தாசனரெல்லா மிவரைக்கண்டு தம்வசமிழந்து கையுறையைக் கொடுத்து வணங்கி யிவர் குறிப் பறிந் தொழுகுவா ராயினர். சத்திய வுலகத்தி லுள்ள பிரமசித்தராயினோ ரிவரமராவதியி லெழுந்தருளி யிருப்பதைத் தங்கள் ஞானவுணர்

ச்சியாலுணர்ந் தங்குவந் திவரிருக்கு மைச்சுவ ரிய காட்சியைக் கண்டு விம்மிதராகி யொருவ ரோடொருவருசாவிப் பூதசுத்தி யாத்மசுத்தி களைச் செய்தற்குரியகரும ஞானங்களையும் அவ ற்றின் கூறுபாடுகளையும் அவற்றிற்குரிய மணி மந்திர அவுடதங்களையும் இலிங்கசரீரம் பிரணவ சரீரம் மந்திரசரீரம் கற்பூரசரீரம் என்கிற நால் வகைச்சரீரப்பயனையும் பூதசரீரத்தை யிந்நால் வகைச் சரீரமாக்கு மூலிகை கற்பங்குளிகை முதலியவற்றையு மிவற்றிற் குரிய மந்திரத் தையுங் கைவசப்பட்ட ஞானசித்தியையு முசா வித்தெளிந்து இவர் முன்ன ரொருமுகூர்த்தம் நிஷ்டைகூடியின்புற்றுக் களித்துப் பிரியாவிடை பெற்றுச் சென்றனர். இவற்றை யெல்லாங் கண்ட விந்திரன் பயமும் பத்தியுமுடையனுகித் தன்னுடைய வாணைக்குட்பட்ட நவநிதிகளும் சித்தர்பாலிருப்பதை யுணர்ந்து அவர் பாற்செ ன்று வணங்கித் தான் கவனியாமலிருந்தமைக்கு மன்னிக்குகவெனப் பன்முறைவேண்டி நின்ற னன். சித்தரவன் வேண்டுகோளுக் கிரங்கின வராய்ப் பற்பல சித்தித்திறத்தைக் காண்பித்து அவன் நவநிதிகளையு மவன்பால் நிறுத்தித் தான் பிரமவுலகஞ் சென்றனர். சத்திய வுலகத்திலே திருவோலக்கத் திருமணி மண்டபத்திலே பது மாசனத்திலே சுரர்களும் இருடியர் குழாமுஞ் சூழ்ந்துபோற்ற நான்கு திசையி லுள்ளாரையு மொரேகாலத்து நோக்கும் நான்குதிருமுகங்

களையுமுடைய திசைமாமுகனைக்கண்டு வேதங் கூறியவழி யான்மகோடிகளைப் பாசத்திற்கீடாகிய தனுகரணங்களைத் தந்து போகத்திற்குரிய புவனங்களிற் படைக்கும் பந்தத்தொழிலையுடையன் முத்தனன்றென வுணர்ந்து கமலயோனியோடுகலந்து வணங்கிக் களித்து வைகுண்டம் செல்வாராயினர்.

விரஜாநதி கடந்து வைகுண்டத்தில் அரதனங்களாலமைத்த திருவாலயத்துள் திருமாமணி மண்டபத்துள் நித்திய லீலா விபூதிமயராகிய நித்திய சூரிகண்மத்தியில் பரமாலங்காரபலிதராய் உலக மாதாவாகிய விலக்குமி சமேதராய் ஆரகேயூர குண்டலங்களா லலங்கரிக்கப்பெற்றவராய்க் காயாம்பூவண்ணராய்க் கமலக்கண்ணராய்ப் பக்தபரிபாலனராய் ஆதிசேடனது ஆயிரபண முடிகளாலும் கவிக்கப்பட்ட திருமுடியையுடையவராய்ப் பீதாம்பர தாரியாய்ச் சுரர்களாலலங்கரித்த துளஸீமாலாபரணராய் விளங்கும் பரந்தாமனுகிய விஷ்ணுவைக்கண்டு தரிசித்து அவ்வுலகக்காட்சி முற்றையுங்கண்டு தம்மை வேண்டினுரைப் பூபதியாக்குஞ் சத்தியை யவர்பாற் பெற்றுப்பிரியாவிடை பரித்து ஞானதீத மூர்த்தியாகிய உருத்திரமூர்த்தி யெழுந்தருளியிருக்கு முருத்திரவுலகம் புகுவா னெழுந்தருளினர்.

மேருமலையின் மேலுள்ள கைலாய மென்னு மாலயத்தில் ஸாலோகவுருத்திரர் ஸாமீபவுருத்திரர் ஸாரூபவுருத்திரர் கூஷ்மாண்ட வுருத்திரர் காலாக்நியுருத்திரர் புவனவாஸ வுருத்திராதி யுருத்திர கணங்களும் பூதகணங்களும் நந்திகணங்களும் சிவகணங்களும் சுரகணங்களும் பிரமவிருடி தேவவிருடி யிராசவிருடி முதலிய விருடியர்களும் மற்ற பக்தர்களுங்கூடிக்கொண் டருச்சித்துப்பூசித்து மகோபசார தீபாராதனைகளை யெல்லாஞ் செய்து திருவடியில் முறைப்படி அட்டாங்க நமஸ்காரங்களைச்செய்தெதிர்நின்று கரங்களைச் சிரமேற் குவித்து தேவதேவா நீலகண்டா காலசங்காரா மார்க்கண்டேயாதி பக்த ரக்ஷகா சுரகணபாலனு மகாபய நிவாரணு கைலாசவாசா பிஞ்ஞகாசிவேசா வுமேசா சபேசா வீசாவென்றுதோத்திரஞ்செய் தானந்த பரவசராகி வேண்டிய விஷ்டசித்திகளைப் பெறுந்தருணத்தில் சித்தர் அங்குற்றனர். ஸாத்விக குணரகிதராயும் ஸருவானுக்கிரக மூர்த்தியாயும் ஸருவாந்தரியாமியாயும் ஸருவஞ்ஞராயும் ஜனன மரணங்களைப் போக்குகின்றவராயுமுள்ள வுருத்திர மூர்த்தியின் சந்நிதியை யடைந்து நமஸ்கரித்துத் தோத்திரம் புரிந்து தன்னை வழிபடுமடியார்களுக்குப் பிறப்புத்தீரத் தான் பார்த்த மாத்திரத்தே பாசம் நீறுகுமாறு வல்ல வரத்தைப்பெற்றங்குள்ள விசல்லியகரணி சவுபாக்கிய கரணியென்கிற மூலிகைகளைக் கண்டவற்றி

ளுள்ள சிவசத்தியைத் தரிசித்து மகிழ்ந்து அதன் பெருமையை நந்திதேவராலறிந்தங்கு மூன்று தினமிருந்து தன்னைப்போலங்குத் தரிசனத்திற்கு வரும் ஞான சித்தர்களைக் கண்டவர்களோடளவளாவி அவர்களால் பரமசிவம் பார்வதிக்குக் காட்டியருளப் பார்வதி மகாசித்தர்களுக்குப் பிரஸாதித்த சஞ்சீவிகளுக்கெல்லாந் தலைமைபூண்ட சிவமே யென்று சித்தர்கள் வழிபடுகிற வாருணி யென்னுஞ் சிவசத்தி மூலிகை யங்கிருப்பதை யுணர்ந்து மகா காரண பஞ்சாட்சர மந்திர ஜபத்தோ டம்மலையின்மேற் சிகரத்தை வலம்வரும் பொழுதச் சிகரத்தி னீசானப்பக்கத்தில் சிவமயமாய்ச் சிவசத்தியருளேபோல விளங்குவதாய்ச் சிவமணங் கமழ்வதாய்த் தரிசித்தார்க்கு ஆதி வியாதி யிரண்டையு நிவர்த்திப்பதா யுண்டவர்களுக்கு அறுபத்துநான்கு சித்திபேதங்களையு மாளுதற்குரிய சரீர சூக்கும வன்மையையும் பராபர ஞானங்களையு மிந்தச் சரீரத்தோடேயே சுத்தசிவ ஞானதீத நிஷ்கள சிவத்தைத் தரிசிக்கச்செய்யும் வன்மையையு முடைய மூலிகையினருகிற் சார்ந்தனர்.

இவர் முன்னமே வேறு பலமூலிகைகளைக் கற்பமாகவுங் குளிகையாகவு முண்டுள்ளா ராதலினெல்லா மூலிகைகளையுந் தன்பாலடக்கிய வக்நி சக்தியையுடைய அந்தச் சிவமூலிகை யிச்சித்தரைக் காந்தமிரும்பை யிழுத்தல்போல விழுத்த

மாத்திரத்தில் சரீரம் நடுங்கிக் கைகள் சிரமீதே றக் கண்களி லாநந்தநீர் பெருக மெய் சிலிர்க்க வாநந்த பரவசராய் ஒன்று முணராது நின்ற னர். பின்பு சில கடிகைகளின் பின்னர்ச் சித் தயோகச் சார்பால் அம்மூலிகைக்குச் செய்ய வேண்டிய பூஜைகளைச்செய்து பிரதட்சண நமஸ்காரங்களை முடித்து ஜபஞ்செய்து தனது குருவைத் தியானித்து மூலிகையினதிதேவதாப் பிரசாதத்தைப்பெற் றம்மூலிகையைப் பறித் துக் கீழ்முகம்நோக்கி பிராணுயாம மும்முறை புரிந்து அசபையைச்சபித்து ஆறுதாரங்களை யகத்தா ணுடிப் புருவத்திடையை நோக்கித்தே யப்பொருளைத் தரிசித்துச் சிறிது நிஷ்டைகூடி யின்புற் றூநந்த பரவசராகிப் பின்பு மூலிகை யைச் சிரத்தின்மேல்பால் பன்னிரண்டங்குலத் தின் துவாதசாந்தத்தானத்தில் வீற்றிருக்குங் கடவுளடியிற் கரமிரண்டிலுங் கொண்டு காட் டிப் பிராணுயாமம் புரிந்து அபிமந்திரித் தாஞ் ஞாத்தானத்திற் கொண்டுவந் தங்குட்டமூர்த்தி யின் சூக்கும பஞ்சாட்சரத்தைச் செபித்து மூலாதாரம் வரையில் அவரோகிணித்துப்பின்பு விசுத்திக்கு வந்து காரண பஞ்சாட்சரத்தைச் செபித்து மூன்று பிராணுயாமம் புரிந்து பின்பு ரேசகஞ்செய் தம்மூலிகையைச் சிவத்தியானத் தோ டூட்கொண்டனர்.

உட்கொள்ளவே யிதுகாறு மெய்தாத சித்தி வன்மையு மெல்லாம் வல்ல சித்தத்தன்மையும் அஃறிணையை யுயர்திணையே போலப்பேசுவித்தலும் பெண்ணையாணாக்கலும் ஆணைப் பெண்ணாக்கலும் நடவாததை நடக்கச்செய்தலும் கருமத்தால் வந்த கூன் குருடு குறள்பங்கு இவற்றை யெல்லாந் தீர்த்தலு மின்ன மெவற்றை நினைக்கினு மவற்றை யெல்லாஞ் செய்யவல்ல திறமும் கருமநோய் தீராத சம்பந்தநோய் கருவிலேயே தோன்றிய நோய் இடையிற்றோன்றியநோய் முதலிய பல நோய்களையுந் தீர்க்குஞ் சித்திவல்லமையு மிவரைத் தாமே வந்தடைந்தன. இவ்வகைப் பெரும்பேற்றையுற்ற சித்தர் மீட்டு முருத்திர மூர்த்தியைத் தரிசித்து நமஸ்கரித்துப் பிரியாவிடைபெற் றிமாசலத்தின் வடசாரலையடைந் தங்கிருந்தநால்வர் மாணாக்கர்களையுங் கண்டு அவர்கள் பக்குவத்தையு முணர்ந்தவர்க்கனுக்கிரகிக்க வவர்களுஞ் சித்தியில் வல்லராயொருங்குவரப் பற்பல விருடியர்குழாங்கொண்டு வசிக்கும் வனச்சாரலில் வந்து இருடியர் வியக்கப் பற்பல சித்திகளைக்காட்டிக் கருமவசத்தால் குன்மந் தலைநோய் முதலிய நோய்களால் வருந்து முனிவரர்க்குத் தக்க மூலிகையினு லவற்றையெல்லாந் தொலைத்தின்புறச் செய்து கேதாரம் வந்துற்றனர். அக்கிரிச்சாரலில் முத்தி வேட்டுலகமுற்றையுங்கானல் நீரெனத்துணிந்து உள்ளதாகக் காணப்படுதல் அவித்தையாலாகி

யது தீர்க்க சொப்ன மென்ற நிச்சய சித்தராயப் பிரமமொன்றே யென்று முள்ளது வியாபகமானது விகாரமற்றது. நாமகுணச் செயலற்றது ஆனந்தமயமானது பிறப்பிறப்பற்றது பரமார்த்திக ஞானத்தாலுணரற் பாலது என்கிற கோட்பாடுடையராகிய முனிவரர் பல ரொருபால் தவஞ்செய்யப் பசுபதி பாசமாகிய மூன்றும் நித்தியப் பொருள் பசுவாகிய வான்மகோடிகளெல்லாம் பாசத்தாலனுதியிலேயே பிணிக்கப்பட்டுள்ளன அப்பாசமொழிந்தா லன்றிப் பசுத் தன்னையுமறியாசிவத்தையு மறியா அப்பாசமும் பரமசிவ திருவருளன்றி மற்றென்றால் நீங்காது. பரமசிவதிருவருளோ சரியை கிரியை யோகமன்றி வேறு வகையால் வராது அச்சரியை கிரியைகளும் சுத்தா சுத்த மென்றிருவகைப் படும் அவை திரிகரண வொற்றுமை யின்றிச் செய்யின் பயன்படா. திரிகரணங்களோ பஞ்சேந்திரிய ஜயமின்றி யொற்றுமைபடா பஞ்சேந்திரியங்களோ தவமின்றி வசமாகா ஆகவே தவஞ்செய் திந்திரிய வெற்றியுற்றுத் திரிகரண வொற்றுமையோடு சரியை கிரியாதிகளைச்செய்து பரமசிவ திருவருளைப் பெற்றுப் பாசத்தை யொழித்துச் சிவசத்தி பதியப் பெற்றுச் சிவ ஞானமுற்று நிர்மலதேகத்தை யடைந்து நிரதிசயாநந்தத்தை யடையவேண்டுமென்கிற கருத்துடையவராய் முனிவர் பலரொருபால் தவமியற்றச்சனகாதி நால்வரும் அவர்களைச் சார்ந்த

மாணாக்கர்களாகிய முனிவரரும் யோகமன்றி யின்பந் தருவதொன் றின்றும் ஞானந்தருவது மதுவே உருவம் அருவம் அருவுருவம் என்கிற மூன்று வகையாய் ஒன்பது பேதமாகிய வுருவங் களையுங் கடந்தவற்றிற் கப்பாற்பட்டானந்த மய மாய் நிற்குஞ் சிவத்தை யடைய வேண்டுமென் கிற கருத்தோடொருபால் யோகமியற்ற உத்த ராயணத்திற் றேவருந் தட்சணாயணத்தில் நரரு மாகப் பூசைசெய்யுங் காட்சியும் அப்பியாசிகளா கிய சித்தர்களும், அநுபவிகளாகிய சித்தர்களும் குழாங்கொண்டு தவமியற்ற மூலிகை தேடிக் கற்பமமைப்பாருங் குளிகையாக்குவாரு மவற் றைச் சோதிப்பாருமாய்ப் பொலிவடைந்து நிற் குந் திருமலையினிடை யுற்றுப் பற்பல சித்தி விளையாட்டுகளை யங்குக் குழாங்கொண்டிருக் கும் முனிவரர் வியப்படையுமாறு புரிந்தங்குள்ள நகரங்களிடையுடன் வரும் நால்வருடன் செல் வாராயினர்.

அக்காலத்தில் சந்திரவமிசத்தில் சூர சேனன் என்னு மபிதானத்தையுடைய வரசன் மகன் வசுதேவனென்பான் அவன் மனைவியோடு பலகாலமாகச் சிறைச்சாலையின் மைத்துனனா லடைக்கப்பட்டு வருந்துவ தொழியு நாளென்னா ளென்று பலபெரியோர் வினவ அதைச் சோதிட வறிவாலுணர்ந்து பல வாண்டுகளுக்குப் பின் னர் திருமால் தேவகி வயற்றி லவதரித்து அத்

துயரை யொழிப்பார் அவ ரவதரிக்கும் நாளட்டமியு முரோகணியுங்கூடிய நாளாம் என்று கூறியவ்விடத்திலும் பிறநகரங்களிலுந் தங்கண்ணிற் கண்ட கூனர்களை யெல்லாம் நிமிர்ந்த வுடலினராக்கியும் மூகையாயினரை நாவலராக்கியும் சிந்து குறளாயினரை நெடியராக்கியும் பலருங் காணப் பதினாறுண்டுள்ளவராகத் தோன்றி யாகாசவெளியில் பதுமாதனமிட்டுட்கார்ந்து கட்டங்கத்தை மடிமீதுவைத்து விபூதிப்பையிலிருந்த பூதியையெடுத்துத் தூவிப் பகலை யிரவாக்கி யிரவிற்றோன்றுந் தாராகணங்களையும் கோள்களையுந் தோற்றுவித்துப் பகல்நாழி குறைந்து இரவு வந்தது இது பிரளயக் குறியென்று பலரும் பயந்து தம்பால் திரண்டுவந்து வினவ அவர்கட்குப் பக லிரவா மிரவு பகலா மிரண்டு மொன்றும் ஈதோரருமையன்று நீவிரஞ்சன்மின் என்று கூறிப் பொக்கணமிருந்த திருநீற்றை யெடுத்து அவர் முன்பு தூவ விரவொழிந்து பகலாக விளங்கியது. அது கண்ட பலரும் விம்மிதராகிச் சித்தரை வழிபட் டகன்றனர்.

அஃதுணர்ந்த பராசரமுனிவர் சித்தரையடைந்து வணங்கி ஞானனுபவங்களைக் கலந்து பேசிக் களித்தபின்பு இவ்வுலகங் கருமஞானங்களை முறையேயுணர்தற்கு வேதங்களைக் கருவியாகவுடையது அவ்வேதங்களோ அநாதிநித்தமாயு மபுருஷமாயு முள்ளன கற்பங்கடோறும்

நீலகண்டனதாணையின்படி யொவ்வொருதேவர் முகமாகத் தோன்றி யுள்ளன அவை உதாத்தவ நுதாத்தச்சொரிதங்களாகிய ஸ்வரபேதங்களை யுடையன அவற்றை யோதும் முறை தவறி யோதுவிப்பாரின்றி யிருத்தலின் உலகுண்மை பெற முடியாதாயிற்று இவ்வுலகு வேதத்தை யோதுமுறையை யுணர்த்திக் கருமத்தையுணர்த்தும் பாகமிது ஞானத்தை யுணர்த்தும் பாகமிதுவெனப் பிரித்துக் காண்டமாக்கி வர்னபதங்களைச் சங்கைசெய்து தருவதற்காகத் தெய்வத் தன்மையையுடைய வொரு முனிவனவதரிப்பினுலகு சீர்ப்படும் அதற்குரிய காலமுமுளதோ வென்று வினவினர். அதைக்கேட்ட சித்தர் தமது சோதிடவறிவா லுணர்ந்து இவ்வுலகத்தி லின்னம் பலவாண்டுகள் கழிந்தபின்பு உம்மை யதிஷ்டித்து ஓர் முனிவன் றோன்றுவன். அவனே வேதங்களை வகுத்து ஓதுமுறையையுங் கற்பித்துப் பேராசிரியனாகுவான் என்றோதி யவ்விடம்விட்டகன்று வேறு வனமடைந்தனர். அங்குப் பஞ்சாக்நிமத்தியில் ஒற்றைக்காலால் நின்றும் இரண்டு கண்களையும் விழித்துச் சிரத்தை மேற்றூக்கியும் நீரிடையிருந்தும் சருகை யுண்டும் உணவின்றியும் பலவாறு தவஞ்செய்யும் முனிவர் குழாத்திடைப்புக்கனர். அங்ஙன முள்ள முனிவரர்கள் சித்தரெழுந்தருளியதைக் கண்டு மிகுந்தசந்தோஷமுடையவர்களாய் இவ்வனஞ்செய்த தவமேயோயாங்களிது காறுஞ்

செய்த தவத்தின்பயனேயோ இறைவனருளே யோ தங்கள் வரவு எங்கட்குக் கிடைத்ததென்று புகழ்ந்து பலமுகமனுரைகூறி யாசனமளித்து அர்க்கியபாத்திய வாசமனுதி யுபசாரங்களைச் செய்து சிலர் தங்கட்கு ஞானங்கை கூடுமாறு திருவருள்செய்யவேண்டுமென்றுஞ் சிலர் யோ கப்பயில்வில் நிஷ்டைகைகூடுமா றருள்புரியவே ண்டுமென்றுஞ் சிலர் தவஞ்செய்தற்குப் புல னுடுங்கவில்லை விடயங்களிலேயே வியாபிக் கின்றன அவை யடங்குமா றருள்செய்யவேண் டுமென்றுஞ் சிலர் மகா சிவயோகங்கைகூடுமா றருளவேண்டுமென்றுஞ் சிலர் முக்காலங்களையு முணருஞ் சோதிடசாத்திரத்தை யுபதேசிக்க வேண்டுமென்றுஞ் சிலர் மெய்ச்சித்திபெறுமாறு கற்ப மநுக்கிரகிக்கவேண்டுமென்றும் பலருந் தத்தமக்கேற்றவாறுவேண்ட அவர்கள் வேண் டியவா றனுக்கிரகித்துப் பலமுனிவர்களுக்கும் நாயகமாய் விளங்கிப் பற்பல வனவனாந்தரங் களில் வாழு மிருடியர்க்கெல்லாம் வேண்டிய சித்திகளை யருளி வடபால் தேசத்துப் பன்னு ளமர்ந்தங்குள்ள மனிதர்களுக்குற்ற தீராநோ யைப் பூதியாற் போக்கியுஞ் செவிடூமை முடம் நொண்டி கூன் முதலியவற்றை வேத்திரத்தால் வருடித்தீர்த்தும் சித்தி பல புரிந்து மனிதர் சார் தற்கரிய கேதாரத்தை மீட்டுமடைந்தனர்.

அம்மலை பற்பல சிறந்த விருட்சங்களால் நிரம்பப் பெற்றுச் சுரர்கள் பலரு மொருங்கு கூடித் தேவதருவாலுந் தேனுவாலும் சிந்தாமணியாலும் சங்கநிதி பதுமநிதிகளாலுங் கொடுக்கப்பட்ட பூஜாதிரவியத்தோ டங்குவந்து அம்மலையினதருவியில் மூழ்கிப் பரிசுத்தமனத்தோடங்கெழுந்தருளியிருக்கின்ற வுமாநாதனைவேதாகம விதிப்படி யபிடேக திரவியங்களாலபிடேகித்துச் சுரதரு மலராற் றொடுத்தமாலையினாலலங்கரித்துத் திவ்யார்ச்சனை புரிந்து வேதமந்திரத்தால் தோத்திரம் நவின்று அட்டாங்கமாக நமஸ்காரஞ்செய் தாலய வலம்வந்து மீட்டும் வணங்கி வேண்டும் வரங்களைப் பெற்றுச் செல்லுஞ்சிறப்பினை யுடையது. மிகுந்த பனியினால் மூடிய சிகரங்களையும் சாரலையு முடையது. பகைமையின்றிப் பற்பல மிருகங்கள் வாழப்பெற்றது. அன்பர்களுக் கனவரதமு மருளப்பசுபதிநாதன் கைலையைப்போல மேவி வாழப்பெற்றது. சித்தர்கள் குழாங்குழாமாகி யாச்சிரமங்கொண்டு வாழப்பெற்றது. பரமசிவத்திருவருளே போன்ற ஸ்வர்ணமூலிகைகளையுடையது. இத்தகைய கிரியில்வந்து சிலவாண்டுகள் சித்தியாடலைப்புரிந்து வீற்றிருந்தனர். அக்காலத்தில் அங்குள்ள முனிவருஞ் சித்தர்களு மிவர் சித்தித்திறத்தையும் மாணாக்கர்களுக்குச் சித்தியையுபதேசிக்கு முறையையும் ஆயுள்வேத தேர்ச்சியையு முணர்ந்து இவரைப் போதாயனரென்

னும் நாமத்தா லழைத்தனர். அங்குள்ள முனிவ ரோடு நண்புபூண்டு நாயகமாகிப் பின்பு மந்தர மலையினிடத்துடன்வரு நால்வரோடேகினர். அம்மலை சுரர்களால் நிரம்பவுவக்கப்பட்டது. உதயராகமென்னும் அருவியையுடையது. சிந் தூரக்கற்களால் நிரம்பியது. மரகதரத்நமுண் டாகப் பெற்றது. கல்கார மலர்களால் நிரம்பப் பெற்ற தண்ணீர்ச் சுனைகளை யுடையது. தேவர் கள் வசிக்கப்பெற்ற சிறந்த வாலயத்தை யுடை யது. உலோகங்களை வேறுசெய்யு மூலிகைகள் களுலப்பெற்றது. மந்திரசித்தியையத் தருவது. தவஞ்செய்வோர்க்குத் தவப்பயனை விரைவில் பெறச்செய்யுந் தூய்மையுடையது. தேவர் களுக்குப் பலதடவை யுதவியாயது. சித்தி கை கூடாத முனிவர்களெல்லாஞ் சித்திகைகூடுமாறு வந்து வசிக்கப்பெற்றது. சித்தலோக சித்தர்கள் கூடிவசிக்கப்பெற்றது. நிஷ்டைகூடு மப்பியா சிகளை யனுபவி யாக்குவது. இன்னம் பற்பல தெய்விகத்தையுடைய வவ்வற்புத மலையை யடைந்து அங்கு வசிக்கப்பெற்ற சுரர்முனிவர் களோடு உசாவித்தோழமை கொண்டவர்குழு வினிடை ஞானயோகத் தமர்ந்து பன்னுளிருந்து பற்பல சித்திகளைக் காட்ட வச்சித்தரெல்லா மிவரற்புதச் சித்தியைக் கண்டு மிக வியந்து ஞானயோகத் திறத்தின் பெருமையா லிவரை யாச்சுவலாயரென வழைக்கவேண்டுமென்றழை ப்பாராயினர். அப்பெயரோ டங்குச் சிலவாண்டு

கள் தவஞ்செய்து நிருவிகற்ப சமாதியின்பம் நுகர்ந்தின்புற்று மேருமலையின்பாற் செல்லும் விருப்புடையராய்ச் சித்திவேட்டுத் தன்னைப் பிரியாது வரும் நால்வரோடு செல்வாராயினர். அம்மலை வித்துருமம் போன்ற நிறமுடைத்து. காகம் வரினுந் தன்னிறமாக்குந் தன்மைத்து. அடைகற்களாக வெட்டு மலைகளையுடையது. எல்லா மலைகளினு முயர்ந்தது. சூரிய சந்திரர்களுந் தாராகணங்களுந் துருவசக்கிரமும் உலக யந்திரமும் சுற்றப்பெற்றது. ஆயிரத்தெட்டுச் சிகரங்களையுடையது. ஒவ்வொரு சிகரத்தினிடத்துஞ் சுரர் வசிக்கு மாலயங்களை யுடையது. ஈசான சிகரத்தில் கைலையென்னு மோராலயத்தை யுடையது. சுரசாதியர்பலரும் வசிக்கப்பெற்ற தேவநகரைத் தன்பாலுடையது. சுரர் ஆபத்து நேர்ந்துழியெல்லாந் தவஞ்செய்து ஈசனருள்பெறுந் தலமாயது. பரசிவனென்றைக்கும் வீற்றிருந்தருளுந் திவ்ய தலமாயது. இன்னோரன்ன பெருஞ்சிறப்புவாய்ந்த வச்சுரகிரியின் மேவி நாற்புறத்தினுமுள்ள தெய்வப் பொருள்களைக் கண்டு விம்மிதராய் வரும் வழியில் சிற்சில ஸ்வர்ணலதைகளையும் ஆயுளுதவு மதகம் வெட்டுப்பட்ட வுறுப்புக்களை யொற்றுமைப்படுத்து மதகம் உலோகங்களுக் கொளிவிஞ்சச்செய்யு மதகம் ஞானந்தருமதகம் முதலிய மூலிகைகளையுங்கண்டு பரமாச்சரிய மடைந்து வரும்பொழுது நவ பாடாணங்களையுங் கட்டி யமுதம்போல நலந்தருமாறுசெய்யும் பல

மூலிகைகளையுங் கண்டு இது சிவபெருமான் தந்த தென வுளங்கொண்டு மகிழ்ந்து சில பகலங்குத் தவஞ்செய்வாராயினர்.

அம்மேருமலையில் சிலவாண்டுத் தவம் புரிந்து தேவர் குழுவோடு கூடிக்களித்துத் தேவ மருத்துவத்திறத்தைக்காட்டி மகிழ்வித்துத் துறவிகளைக் கண்டு அவர்களுக்கு வேண்டிய மனத் துறவின் திறத்தையுமதை யெய்து முறையையும் புறத்துறவு பயன்படாதெனபதையுந் துறவு நிலைத்தற்குப் பொருள்களின் குணகுண மநுபவித்தாற்போல வையமின்றித் தெரியவேண்டு மென்பதையும் பொருளின் குணந்தெரியாதவரையில் அவாநீங்காதென்பதையும் அவா நீங்காத வழித்துறவில்லை யென்பதையுந் துறவு வேட்டோர் அவாக்கெடப் பலதிறப்போகப்பொருள்களையும் நுகர்ந்தாற்போலுணர்ந்துவாந்தியசனம் போல் வெறுக்கவேண்டுமென்பதையும் இவ்வாறு துறப்பின் மனம் சிவத்தினிடத்திற் பிரியாதுறுமென்பதையும் அவர்களைத்தான் ஞானி யென்று மறைகூறுமென்பதையும் அவர்களெப் பொழுதுஞ் சிவமன்றி வேறொன்றைப் பொருளென் றெண்ணாரென்பதையு முணர்த்தியதன்றி யிவ்வாறு துறவாமல் தன்னையோர் பொருளென விறப்ப மதித்துத் தன்னைச்சார்ந்த பொருளைத் தனதென வேட்டுத்திரியு மவர் துறவியெனப் பேர்பூண்டு நீட்டலும் மழுக்கலும் புரிந்து திரி

தல் துறவாகா என்றற் ரூடக்கத்தனவாகிய துறவிலக்கணங்களை யுணர்த்தி யவர்களுக்கு வேண்டிநல்லருள்புரிந்துசுரர்கள் நாப்பணரிய லீலா சித்திகளைப் புரிந்து துருவசக்கிர சித்தியையும் மற்ற தெய்விக விபவங்களையுங் கண்டு மகிழ்ந்து சுரர்களை நோக்கி யுங்கள் சரீரஞ்சுத்த மாயாசரீரமாகும். தோன்றல் மறைதலாகிய ஜனனமரணங்களையுடையது. ஒளிமயமானது. நரைதிரை மூப்பற்றது. தேவமானத்தின்படி நூறுண்டிருப்பது. இது காமியபுண்ணியங் காரணமாக வந்தது. காலவெல்லையி லழிவையடைவது. இதைப் பெற்றதோர் பொருளன்று. எம்மனோரிதை மதியார். இச்சுர சரீரத்தை யாங்கள் பிராகாமிய சித்தியாற் பெற்றெங்குஞ் சஞ்சரிக்கும் வன்மையோடு வேண்டுவரையி லழியாமலும் ஒருபடித்தாகவும் வைத்துக்கொள்வோம். பந்தப்படாமலு மிருப்போம். சமாதியின்பத்தையும் நுகர்வோம். பலவகைப்பட்ட போகங்களை யடியார்க்களித் தனுபவிக்கச் செய்து கண்டு மகிழ்வோம். துரும்பை மேருவாக்குவோம். மேருவைத் துரும்பாக்குவோம். கடலையொருகையி லெடுத்தாசமனிப்போம். மலையைப் புவியாக்குவோம். உயிர்களின் கருமத்தைப் பார்வையாலொழிப்போம். கருவிலேயே வந்தகுறைகளை யெல்லாந் தீர்ப்போம். பிரமனுக்குமரிய பற்பல சிருட்டிகளைப் புரிவோம். ஆதலின் சித்தியினு மரியதன்றுமது சக்தி என்று நவிலவதை யுணர்ந்து அந்தமலையிலிருந்த தேவர்

களுஞ் சித்தர்களும் முனிவர்களும் இவர் சித்தித் திறத்தையும் யோகமுயற்சியையும் ஞானப் பெருக்கத்தையும் போதகத்திறத்தையு முணர்ந்து இவருக்குக் காரணம் பற்றி யாக்கிய வல்கிய ரென்றொரு திருநாமமிட்டு வழங்கினர். பின்பு சில வாண்டுகெ ளங்கிருந்து பற்பல வரியசித்தித் திறத்தையுங் காண்பித்துத் தென்பாற்றிசையி லுள்ளார் கருமத்தாலுறுந் தீயநோயால் வருந்துவதைத் தன் ஞானத்தா லுணர்ந்ததைப் பரிகரிக்கத் தனது ஜீவகாருண்ணிய சிந்தையோடு தென்பாறிசை நோக்கி யுடன்வரும் நால்வராஞ் சித்தரோ டைவராகி கண்டாரதிசயிக்கக்குழுமிச்சித்தி புரிவதுங் கற்பஞ்செய்வதுங் குளிகை யமைப்பதுங் காயசித்தி புரிவதும் உடலைச்சுத்தி புரிந்து வெண்கலம் போன்ற நாதமுண்டாகும் படிச் செய்வதுங்கொண்டரிய சித்திவிளையாடலைப்புரிப வரும் ஞானம் வேட்டடலை வெறுத்தவரும் பிராணயாமம் புரிந்து பிரம நிட்டையிலிருப்பவருஞ் சரியை கிரியைகளை முறைப்படி யியற்றுபவரும் நிஷ்காமியமாகச் சிவதருமஞ் செய்பவருந் தம்மைச் சிவாகாரமாகக்கண்டு வேறு பொருளுளதாகத் தோன்றாமல் சிவோகம் பாவனையில் வாழ்பவரும் உலக முற்றையுஞ் சிவமாக வுணர்ந்தவரும் பிரமமாகிய சிவமொன்றே நித்தியமாக வுள்ளது வேறுபொருளின்று அப்பொருளை யறியுமாறு சாதுக்களோடு கூடி நித்தியபொருள் அநித்தியபொருளிவை யென்பதையும் அவற்றின் திற

த்தையும் அவற்றின் சேற்றத்தையும் நன்குணர்ந்து பரமாசாரியர் கிருபையால் மாயாகாரிய பதார்த்தங்களை வெறுத்துத் தீர்க்கஸ்வப்பனம் போல காணப்பட்டழிவதாய் உலகபேதங்களாகவுஞ் சுத்த போகங்களாகவுந் தோற்றுவதாய்ப் பொன்போ லொளிவிடுவதா யமுத முதலிய சுவைப்பொருளை யுடையதாய் நரை திரை மூப்பற்றதாய்ப் பார்வையினாலேயே யெல்லா விந்திரிய சுகத்தையுந் தருவதாய்ப்புண்ணியத்திற்குத் தக்க சுகந்தருவதாய்ப் புண்ணியகால வெல்லை வரையிற் சுமப்பதாய்ப் பிரளய காலங்களிலழிந்து மீட்டும் பழயபடி இறையருளால் தோன்றுவதாய்ச் சுத்த ஞானியரால் வெறுக்கப் பெற்றதாயுள்ள போகாந்தர சுகங்களையெல்லா மனித்தியமென வுணர்ந்தென்று முள்ளதாய் பரமவியோமம் போன்றதாய் நிர்விகாரமாய் ஒன்றாய்த் தன்னையின்றி வேறில்லதாய் எல்லாமாய் நுணுகிய வறிவா லுணரும் பொழுதவையல்ல வாய்ப் போக்குவரவற்றதாய்க் கிருபாமயமாய் அவித்தையா லறியப்படாததாய் ஞானியருளத்தும் யோகியரது புருவங்களினிடையும் பத்தர்களது பத்தியிலும் வேதத்தினுச்சியிலுமென்று முள்ளதாய்ப் பாலினெய்போல ஞானியருளமுற்றிலும் விறகிற்றீயேபோல அஞ்ஞானியாதுளத்திலுமாக வுலகமுற்றுஞ் சாட்சி பூதமாய் வியாபித்து நிற்பதாய் ஆனந்தமயமாகிய பரம நிட்டையைப் பெற முயல்பவரும் சமயவிசேட நிர்வாணதீட்சையி

ஹற் சுத்தியுற்றுச் சைவானுட்டான பராரய்ச் சிவபூசையை மேற்கொண் டன்போடாவரண பூசை முதலிய பூசைகளோடு சிவபூசையைப் புரிந்து தங்கள் பாசமொழியுமாறு சிவபத்தி புரிந்து சிவ விரதானுட்டானங்களை மேற்கொண்டு பரமாசாரியனது சட்சுத்திட்சையாலும் அஸ்தமஸ்தகசையோகத்தாலுங் ஔத்திரியாலும் பாசநாசம் பெற்றுச் சிவசத்திபதியக்கொண்டு இருவினை யொப்புவாய்க்கப்பெற்றுச்சிவபோத மேவிடத் தன்னை மறந்த சிவஞானியாகி யுறுபவரும் சிலாதர முனிவரது குமாரராகிய சைலாதி முனிவரது வடிவமாகிய வம்மலையின் மேலிடத்திற் கருமசாதாக்கியதிருவுருவமாகிய சிவலிங்கத்திருவுருவத்தோ டெழுந்தருளியுள்ள சிவபெருமானைத் தரிசிக்கும் பேரன்புடையருமாகிய பலராலும் விரவப் பெற்றுள்ள அம்மலைக்கெழுந்தருளினர்.

அம்மலையின் மேற்பக்கத்தேறி யங்குள்ள விம்மிதங்களைக் கண்டு நிரம்பவுவகையுற்றவராய்க் கீழ்ப்பக்கத்தே யம்மலைச்சாரலை நோக்கும்பொழு தங்கொரு தழைத்த கதலிமா வனத்தைக் கண்ணுற்ற னர். அதனடியில் தவஞ்செய்வாரும் யோகஞ்செய்வாருஞ் சித்திப்பெருமையைப்பேசுவாரும் மௌனநிலையிலுறுவாரும் சுவணசரீரத்தோடு திரிவாருமாகிய பலரையுங்கண்டு விம்மிதமடைந்தனர். அப்பொழுதவ்விடத்திருத்த திரி

லோசனன், விபு, அமுதாசனன், புலஸ்தியன், புலிப்பாணி சித்தராமன் முதலிய வைம்பத்து மூன்று சித்தர்களுள் தலைவராகிய கோரக்க ரென்பவரைக்கண்டு மிக மகிழ்ந்து கலந்து பேசிய பொழுது கோரக்கர் தமது சித்திவலிமையை யுந் தனது சரீரமழியாதென்பதையும் அதற்குத் தாமுண்ட கற்பங்களையுஞ் செய்த தவத்தையும் புகன்று பின் தனதுடலைத்தட்டி யதனிடத்தில் வெண்கல வோசையைப்போன்ற வோசை யுண்டாவதையுங் காட்டினர். காட்டவே யஃதுணர்ந்த கருணாநந்த சித்தர் கோரக்கரைப்பார்த்து நீரடைந்த சித்திசிறந்த சித்தியன்று இதுதாதுவேதியென்கிற மூலிகையினாலாயது. முத்தியில் நிலையாதது. நினைத்த வடிவாக முடியாதது. ஞான சித்தர்களால் விரும்பப்படாதது. கருமசித்தர்கட்குரியது. துரியம்வரையில் ஜாக்கிரத்தி லிருப்பது. துரியாதீதநிலையைப்பெறாதது. ஆதலினிது பிரதம சித்தியன்றி முடிந்த சித்தியன்று. ஏழாவது சித்தியாகிய வீசத்துவமென்னுஞ் சித்தி முடிந்து வசித்துவசித்தி கைவந்தவரே தேர்ந்த சித்தராவார். ஈசத்துவ சித்தியாவது சங்கினி குச்சை புரோடாசனி யென்கிற மூவகைய சத்தி மூலிகையினாற் செய்து சிவகுரு கலந்த கற்பத்தை மூலாக்கினியைத் தொடர்ந்தெழும் உதராக்கினி மேனோக்கிக் கொழுந்து விட்டெழு மாண்டாகிய பதினைந்தாமாண்டிலுண்டு சிவக்கூறாகிய அஸ்திகதமாகச் சத்திக்

கூறுகிய மற்றைத் தாதுக்களை யடக்கிப் பின்பு பிராணயாமம் புரிந்து இடகலைபிங்கலையினியற் கையுணர்ந்து சுஷுமுனையினிடத்தையும் அதன் மாத்திரையையு முணர்ந்து அநுபவவாரியினல் ரேசக பூரககும்பகத்தின் மூலத்தை யுணர்ந்து பிராணேதக மென்கிற மூலிகையினல் பிராண வாயுவை வசஞ்செய்து சுவாஸசங்கையைப் பகுக்கும் வலிமையையடைந்து பிங்கலையில் சூரியகலை பத்திற்கு மேற்பட்டு நடக்குந் தருண மறிந்து சித்தகுருவால் ரேசகமுறையைக் காட்ட வவ்வண்ணமே தொடங்கி ரேசித்துப் பின்பு பூர கஞ்செய்து அதன்பிறகு கும்பக முணர்ந்து மூன்றுஞ்சவ்வியா பசவ்வியமாகக் கைவந்த பிறகு வாசிபேத மறிந்து மூலாதாரம், சுவாதிட் டானம், மணிபூரகம் அநாகதம், விசுத்தி ஆஞ்ஞை, என்கிற வாறுதாரத்தையும் அவற்றின் தக்வாங் குலப் பிரமாணத்தையும் அவற்றில் வசிக்குந் தெய்வங்களையும் அவர்கட்குக் கொடுக்குஞ் சுவாசவிலக்கத்தையும் அவற்றிலாரோகணித்துத் தத்துவ சோதனை புரியும் முறையையுங்காண் பான் காட்சி காட்சிப்படு பொருளாகநிற்கும் நிலையையும் இம் மூன்றுமின்றி யாஞ்ஞையிலது வாயடங்குஞ் சத்தியத்தையும் நன்கு தேர்ந்து பிறகு அசபையை நூற்றெட்டு முறைக்கணித் துப் பூதிபூசிக் கீழ்முகநோக்கித் தலைநிமிர்ந்து சுகாசனத்திலிருந்து அசபாகரணங்களை யியற்றி மூலாக்கினியை யெழுப்பி மேலோங்கிக்கொழுந்

துவிடப்புரிந்து மூலாதார கமலத்தை மலர்த்தியங் கமர்ந்துள்ள மூர்த்தியி னருளைப் பெற்றுச்சரீரத் தைச் சுத்திபுரிவான் வேண்டிப் பிலாவன பிலே சன மென்னு மிரண்டு கருமங்களையும் புரிந்து பிலாவன கருமத்தால் சருமமுதலிய தாதுக்களை தக்த படம்போற் செய்தும் பிலேசனகருமத் தால் அஸ்தியைக் கற்பூரம்போற் சுத்தி புரிந்தும் அசுத்தமாயா தத்துவங்களைப் பரிணமப்படுத்திச் சுத்ததத்துவமாக்கி நினைத்தபடி யெல்லாந் தோன் றற்குரிய தெய்வசித்தியுற்றுப் பலவிடங்களிலுந் தானொருவனே பலவடிவங்களாகத் தோன்றி யொரேகாலத் தொரே இடத்துப் பலர் காணப் பாலனாகவு மவ்விடத்தே விருத்தனாகவுஞ் சிசு வாகவும் வயது முதிர்ந்த துறவியாகவு மிளமை வாய்ந்த போகியாகவும் அறிந்த சிவயோகியாக வும் உலகை மறந்த ஞானியாகவும் எல்லாம் வல்ல சித்தனாகவுங் காணப்பெற்றுச் சரங்களை யசரங்களாகவும் அசரங்களைச் சரங்களாகவுமாற் றிக் கருவிலேயே யுற்ற வடிவம்பற்றிய தோடங் களை எல்லாம் பூதியாலும் வேத்திரப் படையால் வருடுதலாலும் போக்கி மும்மூர்த்திகளுடைய வுலகம் புகுந்து அவரருள்பெற்று ஆக்கல் காத்தல் அழித்தல் மறைத்தல் அருளல் என்கிற சிவத் தொழிலைந்தையும் பெற்றுச் சுதந்தரராக நிற்றலாம் என்று கூறினர். அதைக்கேட்ட கோரக்க ரவ்வகைய சித்தியை யான் பெறுமா றுபதேசிக்க வேண்டுமென்று வேண்டினர்.

அதற்கவ்வாறே யாகுக வென்று நவின்று மலைப் புறமாக வலம் வருகையில் சித்தி வேட்டுக் கைகூடாது வருந்து மப்பியாசிகளாகிய சித்தர் களிவரைக்கண்டு காணுக்காட்சி யடைந்தவராகி மிக மகிழ்ந்து வந்து சரணுகதி யடைந்தனர்.

தன்னை வந்து சரணுகதியடைந்த பாலசித் தர்களை நோக்கி யவர்கள் பக்குவத்தை யுணர்ந்து அவர்களுக்கு நல்லுபதேசஞ்செய்ய விரும்பி யம்மலையிலும் பக்கத்திலுமுள்ள மூலிகைகளையு மவற்றின் குணங்களையும் நன்குணர்த்தி பறிக் குங் காலத்தையும் உண்ணும் வேளையையும் உண்டபின் வாசி கூடும் வகையையும் பிராணு யாம முறையையும் மருந்தின் பெருமையை யும் உடலினருமையையு மதனுலெய்தற்பாலன வாகிய சித்திகளையுஞ் செவ்வையாகப் போதித்து ஆங்காங்குள்ள முனிவர்கள் வேண்டியதை முற்று மவ்வவர்க்கருளித் தானும் வாசிகூடி- யின்புற்றிருக்கையில் அப்பூதரத்தில் வாழுஞ் சித்தர் முனிவர் பலரு மிவரது சித்தித்திறத் தையும் ஞானமிகுதியையும் அநுபவத்திறத் தையு முணர்ந்து கொண்டாடினராகி யிச்சித்தவ ரைக் கார்க்கியரென்கிற நாமத்தாலழைக்க வேண்டுமென்றழைத்துப் புகழ்ந்தனர். பின்பு சிலவாண் டம் மலைமேலிடத்தில் நிட்டாவின் பத்தை நுகர்ந்தானந்தத்தழுந்திய சித்தருடன் வரு நால்வரோடெழுந்து மூலிகை முற்றுங்

திரண்டதோர் வனமென் றுணரக் கிடந்த கதலி மாவனத்தைக் கண்ணுற்றங்குச்சென் றுநாட்டிய தறியேபோல வுடலசையாது கண்ணிமையாது சிரமசையாது மேலே குவித்த கையினராகித் தவஞ்செய்வாரும் பதுமவியாக்கிர கூர்மாசனங் களிலிருந்து கருமயோக வடயோகம் பயில்வா ருஞ் சுகாசனத்திலிருந்து சிவயோகம் பயில்வா ரும் ஆசிரியன் குறித்த முத்திரை வழியே மனந் தங்கி நிற்கப் பழகுவாரும் மெய்ச்சித்தி புரிவா ரும் ஞானிகளாகி யெல்லாஞ் சிவமெனக்கண்டு வேறு காணுது போதாநந்த மயமாக வொழுகு வாருமாகப் பலமுனிவர் வசிப்பதைக் கண் டிதுவே தவத்தானமெனத் துணிந் தங்கோர் சூழலிற் சுகத்தானத்தி லியம நியம ஆதனப் பிரா ணயாமப் பிரத்தியாகாரத்தியான தாரண சமாதி யென்கிற வங்கங்களோடு மகாசிவயோகத்திற் றங்கினர். உடனுற்ற நான்கு சித்தர்களு மங்கு வாசிகூடத் தவஞ்செய்தின்புற்றனர். இவ்வாறு சில வாண்டுகள் கழிந்தபின்னர்த்தென்னுட்டிற் றஞ் சித்தி வன்மையினுற் பற்பல வரிய செயல் களைச் செய்யவும் அங்குள்ளா ரது தீய நோய் களை யொழிக்கவும் அங்குப் பலவாண்டுகள் வசிக் கவும் விரும்பி யிடையிலுள்ள பல திருநகரங் களை யெல்லாம் பிறர் காணுவண்ணஞ் சஞ்சரிக் கும் மகிமாவென் னுஞ் சித்தித் திருவுருவத்தைக் கொண்டு கண்டு மகிழ்ந்து மன்னர்வாழும் பல நன்னுடுகளையுந் தேவதேவனமர்ந் தடியார்களுக்

கனவராத மருளும் திருத்தலங்களையும் பதஞ்சலி, போகர் திருமூலர்முதலியசித்தர்களிருந்து தவஞ் செய் தருள்பெற்ற திருத்தலங்களையுங் கண்டு நீங்காப் பெருங்களிப்போடு தனித்ததாய் வட மொழி யோடிணையுற்றதாய் இன்னேசை நிரம் பியதாய் எம்மொழிக்கு மில்லாத வகப்பொ ருள் புறப்பொருளிலக் கணங்களையுடையதாய்ப் பொருள்வடிவமாகிய விறையனரா விலக்கணஞ் செய்யப்பெற்றதாய்த் தெய்விகமுடையதாய்ப் பஞ்சகிருத்திய வானந்த தாண்டவம் புரியுஞ் சிவ பெருமான் திருச்செவிக்கு மிக்க வின்டம் விளைப் பதாய்த் திருமாலுக்கு மிக்க வுவகையைத் தருவ தாய்த் தெலுங்கு கன்னடம் மலையாளந் துளுவு என்கிற பலபாஷைகள் தன்பாற்றேன்றப் பெற்ற தாய்த் தனக்கிணையற்றதாயுள்ள செம்மொழியா கிய தமிழ்மொழி யிலக்கணத்தைச் சிவபெருமா ஞலும் பிரமனைச் சிறையிருத்திவரையுரங்கிழித் துச் சூரனைத்தடிந்து குன்றுதோறுடிப் பிரானுக் குப் பிரணவப்பொரு ளறிவுறுத்திய வாண்டலைக் கொடியுயர்த்த வமரர் குலத் தலைவனுலும் உபதே சம் பெற்றுத் தலைமைத்தவம் புரிந்து இருடியர் தலைவனுய்ச் சித்தர்கட்கு மன்னனுய் அயோனி ஜனுய்க்குடமுனி யென்னுந் திருநாமத்தோ டகத் தியர் பல சித்தமுனிகளோடு வீற்றிருக்கப்பெற்ற சந்தனமுந் தென்றலுஞ் செந்தமிழும் நிரம்பிய தவமலையாகிய பொதிகைமலையை யுற்றனர். அம் மலையின்மேற்பக்கத்தில் எவ்வகைப்பட்ட வுலோ

கங்களையும் மருந்தாக்கவல்ல குருமுடிப்பவரொருபாலும் மூலிகையைத்தேடி வாதம்புரிவோரொருபாலும் அகத்தியனாருள் பெற்று வாசியின்பம் நுகர்வாரொருபாலும் நவபாஷாணங்களையு மங்கியில் வைத்து வெதுப்புவாரும் ரஸலிங்கம் புரிவாருந் துரிசுச்சுன்னம் புரிவாருந் தாம்பிரத்தை நீற்றுவாரும் ஒரே மூலிகையினு லெல்லாப் பொருள்களையுங் கட்டுவாரும் குளிகையுண்டு உலகமுற்றுந்திரிந்து மீள்வாருந் துறவு பூண்டு திரிவாருங் காயத்தை கற்பத்தாற் கட்டுவாருஞ் சேர்ந்து ஒருபாலுங் குழாங்குழா மாகக் கூடித் தமிழாராய்வாருஞ் சிவபூசை யாகம விதிப்படிச் செய்வாருங் காலையிலும் மாலையிலும் அகத்திய னாரது திருவடியில் வந்தித்து சோடசோபசார பூசையைச் செய்து திருவருள் பெறுவாருமொருபாலுமாகக் கூடியிருக்குங் காட்சியைக் கண்டு மிகமகிழ்ந் துலாவினர். அப்பொழு தம்மலையில் சந்தனவிருட்சத்தின் செறிவையும் பலவிடங்களில் குளிர்ந்த வருவிகளின் வீழ்ச்சிச் சிறப்பையும் பலகொடிகள் பூத்து நறுமணநிரம்பிய சிறப்பையுந் தவஞ்செய்வோரங்கி வளர்க்கும் வனப்பையும் மருந்தினை முடித்துத்தேவி முன்பு வைத்துப் பூசனைபுரிவாரது பத்திமையையுந் தேவர்கள் குழுக்கொண்டு வசிக்கும் பெருமையையுந் தவஞ் செய்வோரது தவச்சூழலையும் ஞானியர துளம் போலத் தெளிந்தரித்தோடு மொழுக்கத்தையுமுடைய நதியின் வனப்பையுங் கண்டு மகிழ்ந்து

அவ்விடத்தே தவஞ்செய்ய விரும்பினராய் வாசி
த்திறத்துவகை பலதோன்ற வின்ப சமாதியுற்றுச்
சித்தித்திறத்தை முனிவர்கண்டு வியக்கப்பல புரி
ந்து அகத்தியனு ரடித்தலத்தில் நமஸ்கரித்து ஆலி
ங்கனம் புரிந்து அம்மலையிலுள்ள வரிய மூலிகை
யை யவர் காட்ட முன் தானுண்ணு மூலிகை
சிலவிருப்பதைக்கண்டு பறிக்குங் காலமறிந்து
பின்பு விதிப்படி பறித்துண்டு சிலநாளிருந்து
அகத்தியனுருறு மலைக்கருகே யுள்ளதும் பலயுகங்
களிலும் பல நாமங்களையுற்றதுஞ் சஞ்சீவி முத
லிய பல மூலிகைகள் நிரம்பியதும் யோகியர்
யோகஞ்செய்யும்மணிபூரகத்தானத்துச் சங்கொலி
பிரணவவொலி மிகப்பெற்றதுஞ் சித்தகிரியென்
கிற நாமத்தையுடையதும் இவ்வுலகத்தில் சுருளி
யென்கிற பெயரையுடையதுமாகிய தவமலைக்
ககத்தியரருளோடு நால்வருடன் வர வெழுந்தரு
ளினர். தன்னை யடையத்தவஞ் செய்த அடியார்
களுக்குந் தவஞ் செய்தபொழுது முற்றுங் கை
கூடாதிடையில் சரீர நீங்கவது காரணமாக மறு
பிறப்பிற்றன்னைக் குருவாகவடையும் வரம் பெற்
றுள்ள வடியார்க்குமருளவும் தென்னுட்டிற் றன்
சித்தி மகிமையைப் பரவச்செய்யவும் அங்குள்ளா
ரது நோயைத் தீர்க்கவும் ஞானத்தை வளர்க்கவும்
பல முனிவர்களது யோகத்தை முடிப்பிக்கவுந்
திருவுளங்கொண்டு சிருட்டியாதி பிரமசகாப்தம்
நூற்றுத் தொண்ணூற்றைந்து கோடியே வைம்
பத்தெட்டு லக்ஷத்தெழுபத் தொன்பதினயிரத்தை

ந்நூறுக்குத் துவாபாயுகத்திற் செல்லுவருஷம் எட்டுலட்சத் தறுபத்து மூவாயிரத்தைந்நூறு. அப்பொழுது சித்தரது வயது எட்டுலக்ஷத்தறுபத் தோராயிரத்து நானூற்றுத் தொண்ணூற்றொன்று நிகழும் நாளம்மலைக்கெழுந்தருளி யொரு நூறுண்டு வரையிலரிய சித்திகளைப்புரிந்து தவத்திலேயே யிருந்தனர். பின்பு உலகுய்யச்செய்யுங் கிருபையினல் தன்னை வந்தடைந்த வோர் வைசியன் மகனை யடிமைகொண்டவனுக்குப் பதினேழா மாண்டாகிறபருவம் முதல்முப்பதா மாண்டளவும் வைத்துச் சித்தியையும் யோகத்தையும் பயில்வித்து மருத்துவத்திற்குரிய மூலிகைகளையும் மருந்தின் பேதங்களையும் விஷநிவிர்த்திக்குரிய மருந்தினையு மெல்லாவற்றிற்கு முரிய வனுபானங்களையும் மந்திர ஜபங்களையும் மணியையுங் கற்பித்து உலகிலுருவோடு திரியுஞ்சித்தனய்த் தென்பாற்றிசை முற்றிலும் மணியாலும் மந்திரத்தாலும் அவுடதங்களாலு முறும் நோய்முற்றையுந் தொலைத்துத் தன் பெயரை யுலகமுழுமையும் நாட்டி யெல்லாருந் தியானிக்கவும் பூசிக்கவுஞ் செய்தழகிய விளையாடலைப் புரிந்திருந்தனர். அப்போழ்திதனையறிந்த தேரையர் இத்திசையிலேயே தானுந் தன்னசிரியரு மிருந்துந் தங்கள் பெயரால் மருந்துஞ் சிகிச்சையுமின்றி யிருக்கின்றதென்றுணர்ந்து நூலாலேனுந் தங்கள் சிகிச்சையை யுலகுணர்ந்து கொள்ளத் தன் பெயரால் ஐயாயிரஞ் செய்யுளில் மருந்துணரும் நூலும் நீரைச்

சோதித்து நோயறியும் நூலொன்று மியற்றினர். சித்தரது மாணுக்கராகிய விளஞ்சித்தர்தென்பாலுலகமுற்றுஞ் சஞ்சரிப்பாராகிச் சித்தர் நாமமமைந்த மருந்தாலு மவரருளாலும் நோயைத்தீர்த்துப் புகழாக்கிப் பெரும்பொருள் சேகரித்து அந்தணர் துறவோர் வறியோர் சிவனடியார் சிவாலய முதலியவற்றிற்குச் செயற்பாலனவாகிய நல்லறங்களைப்புரிந்து பல்லாண்டு வாழ்ந்து பிற உலகை மறந்த ஞானியாயினர்.

பின்னர் மேற்படியுகம் எட்டுலக்ஷத்து அறுபத்துமூவாயிரத்தறுநூறில் நல்லாசிரியனை யடைந்து சித்தி பெற்றுடலின் தன்மையுஞ் சிருட்டித்திறமும் பெறவாசித்து ஆசிரியன் தக்கவனுகப் பெறும் புண்ணிய மப்பிறப்பிலின்மையால் மறுபிறப்பிற் பிராரப்தங்காரணமாக வந்த வுடலோடு நல்லாசிரியனை நோக்கிப் பசு மலையினிடமிருந்து தவஞ்செய்தனன். அவ்வாறு தவஞ் செய்து வந்த வேளாண்மகனுக்கிரங்கி யம்மலையிடங்களை யெல்லாந்தனக்கத்தாணியிடமாகக்கொண்டு சித்திசெய்யுங் கருணைச் சித்தரவனுக்குப் பிரத்தியட்சமாகி மருந்துமூலிகையைமட்டுந் தந்து உடலை நீடித்திருக்கச்செய்து மருத்துவோபதேசஞ் செய்தகன்றனர். பின்பவர் பெரிய மருத்துவராகித் தென்னுடுமுற்றும் மருத்துவம் புரிந்து பெரும்பொருள் தேடிப் புகழொடு வளருநாள் உலகிலுள்ளார் பலரு மிவரைப் பெரியவரென்று புகழவே

யதுகாரணமாக மயங்கிச் செல்வச் செருக்காற் சித்தரை மறந்து மருந்திற்கும் வேறு பெயரிட்டு வழங்குவராயினர். அஃதுணர்ந்த சித்தர் தமது தயாகுணத்தா லதை மறந்திருந்தினர். சித்தரோ டிருந்த நான்கு சித்தர்களுள் மூன்றாவதாகிய சர்ப்பசித்தர் சினந்து சபித்தனர். அது தொடங்கி யம்மருந்துகை வராமல் செய்வகை மறந்து குரு முடியாது பேதையாயினர்.

பிறகு மேற்படியுகம் எட்டுலக்ஷத்து அறுபத்து மூவாயிரத்தெழுநூற்றைம்பது நிகழு நாளில் அந்தணர்குமாரன் பொதிகாசலத்தில் வராகியைக் கருதித் தவஞ்செய்திருந் தவனுக்கு அம்பிகைஇரவில் கனவின்கன் வந்து "இதற்கடுத்த சுருதிமலையினிடஞ் சென்று மேலிடத்தில் முன்னிடத்திலே தழைத்த விருக்ஷத்தி னடியில் பற்பல சித்தர்கள் கூடியிருக்குந் தலமொன்றுள்ளது, அவ்விடத்திற்சென்று நீ தவஞ்செய்க, நீ வேண்டிய சித்தியை நம்மருளாலேகமது சத்தியை மிகவுமடைந்துள்ள கருணைச் சித்தனுனக்குத் தோன்றியருள் செய்வான். நீ யுலகில் சித்தனுகி மருந்தினுலும் மந்திரத்தாலும் புகழ்பெற்று நல்ல சித்தியுடையவனுகுவாய்" என்றருள் புரிந்து மறைந்தனள். உடனே யவ்வந்தணர் அம்மலையை யடைந்து மேலிடத்திற் சென்று அம்பிகை கூறியதலத்திற் சித்தர் கூட்டத்தை யடைந்து தவஞ்செய்வாராயினர்.

அவ்வாறு தவஞ்செய்யும் நாள்களுள் ஒரு நாள் பூதிதரித்த மேனியும் முழந்தாளின் நீண்ட கைகளும் விபூதிப்பையும் ஒளிநிரம்பிய மேனியுமாய்க் கண்ணெதிரே தோன்றி யன்பவென்றழைத்துஅவன் கையிலொரு குருவை யளித்து இது மருத்துவத்திற்கு வித்து என்று கூறிப் பின்பு மறைந்து நிழல் போலவன் முன்னின்று நீ இந்த யுகமுற்றுமேயன்றி கலியுகத்தில் நூறு வருடம் வரையிலும் உலகுக்குப் பெருஞ்சித்தனுகி மருத்துவச்சித்தியிற் பெருமைவாய்ந்து பெரியனுகுவாய் என்றருளி மறைந்தனர். பின்பவ்வாறே யவ்வந்தணன் சித்தரளித்த குரு மருந்தாம் வித்தினுற் பல மருந்துகளை யமைத்துச் சத்திக்கு நிவேதித்துலகிற் களித்துப் பல நல்லறங்களைப் புரிந்து கலியுகத்தில் நூருண்டுவரையில் பொருட் பேருடு வாழ்வானுயினுன்.

அதைக்கேட்ட புகர் வினுவுவா ராயினர். கலியுகத்தில் நூருண்டு வரைக்கு மென்றது எது பற்றி அவற்றை யுணர்த்த வேண்டுமென்றதற்குக் குருவிடை பகர்வாராயினுர். அவ்வந்தணன் கருமத்தாலுதிபதி யமிசத்தில் நீசனுகிக் கலைகள் குறைந்து சுபவர்க்க பல மின்றி யிருந்தமையாலும் துக்தாம்சத்திற் பிறந்து புண்ணியகலை குறைந்தமையாலும் பூரணசித்திபெருனுயினுன். அவனுக்கருளிய குருமருந்தின் காலமதுவரையுந் தான். பின்பு வேறு பிறப்புற்று பதின்மூன்ருவது

வயதிலேயே இச்சித்தரை யடைந்து ஞான மூலி கையின் சாதனத்தாலும் யோகத்திறத்தாலும் கலையின் முதிர்ச்சியாலும் ஞானநிஷ்டாபரனுகியா த்மாநந்தத்தைப் பெறுவான் என்று விளம்பினர். பின்பு கலியாப்தம் நூற்றுக்குமேற் றன்னுடைய வருள் பெற்ற கேரளதேசத்துச் சூத்திரனுல் மேல்பால் தேசங்களிலும் தென்றிசைகளிலுஞ் சித்தி புரிந்து விளையாடினர். அவ்வா றைந்நூரு ண்டாயது. பின்பு கலியுகம் ஐந்நூற்றுக்குமேல் ஆயிரத்தைந்நூறுவரையிலும் பிரபல நோய்களை யும் தீயகருமங்களையும் ஒழித்தற்கு ஒருமன்னர் மரபிற் பிறந்த வில்லத்தானை யதிஷ்டித்து நடாத்தி னர். அதற்குமேல் கலியுகம் ஆயிரத்தைந்நூறு க்குமேல் மூவாயிரம்வரையில் அநுலோம சாதி யிற்பிறந்த விரண்டு துறவியரால் நன்மருந்துகளை யருளித் தீயநோயை யொழித்தனர். பின்பு கலியு காப்தம் நாலாயிரத் தெண்ணூற்றெண்பத்தேழா வது ஆண்டு நிகழ்கையில் தன் மலையடிவாரத்தி லிருந்து தன்னைக்காணமுடியாது வருந்தித் தன் மலையில் வசிக்கின்ற துறவியரும் அப்பியாச சித் தர்களுங் கீழிடங்களில் வருந் தருணத்தில் குறை யிரந்தவர்களிடத்தில் விண்ணப்பித்துக்கொள்ளப் பலகாலமாக வவ்வந்தணனது பக்குவத்தை நோக் கப்பராமரித்து வந்தனர். அவ்வந்தணன் சித்தா தருள்பெற்றுச் சித்தியுற்று மருத்துவமேனுஞ் சோதிடமேனுமறிந் துலகில் வாழ்தலன்றி யுயிரு றுத வின்றெனத்துணிந்திருப்பதை யுணர்ந்து

மீட்டு மச்சித்தரது அடியார்கள் சித்தர் முன்னிலை யில் மெல்லக் கொடுப்போய்ப் பலகாலமாகக் காத் திருப்பதையு மன்பின் மிகுதியையும் மனவுறுதி யையும் அவர் வேட்கையையும் புகன்றனர். அது கேட்ட சித்த ரிவ னுலகிற்குப் பயன்படான் அவா மாத்திரமன்றி யதற்குரிய வினையில்லாதவன் என் றறிந்து வேண்டுகோளுக்காக ஞானத்தை யுபதே சித்தனர். அவனங்ஙனமே யிருந்து ஞானங்கை வர அங்குள்ளவர்களோடு பழகி ஞான மனுபவத் திற்கு வர வின்புறுவானயினன்.

வேளாளகுலத்தினனகிய ஒருவன் முற்பிற ப்பில் நல்லாசிரியனை யடையத் தவஞ்செய்தடை யுந்தருணத்திற் றவக்குறை றவாலும் மீட்டும் பிற ப்பிருத்தலாலும் அப்பிறப்புப் பாக்கியப் பேற் றிற்குரிய பிறப்பின்மையாலும் சிறிது சாபத்தா லும் குரு தரிசனமின்றி யிறக்கவவன் குரு வருளா லுலகிற் பெரும் புகழோடு பெரும்பேறு பெற்று நிலையுறுமாறு திருவருள் புரியக்காலம் நோக்கியிருந்தனர். முற்றவத்திறத்தால் மகிதலத் தில் கன்னியாலக்கினத்தில் வைசேடிகாம்சத்திற் பிறந்து நலமுறவேண்டிய மாணக்கனைப் பதினெ ட்டாவது வயதிற் குறிப்பிட்டும் இருபத்தேழி று தியில் இருபத்தெட்டின் றெடக்கத்திற் பிரபலப் படுத்தக் கருதியும் நேராக தரிசனந்தந்தும் சாயை யாகத்தோன்றி யருளியும் இரவில் கனவின்கண் உருக்காட்டிப்போதித்தும் பல போகநுகரவருளி

யுங் கூடவிருந்து காப்பதாகத் திருவருள் புரிந்து மிவ்யுகத்திற்கேற்ப வுலகத்திற்கு மருத்துவச் சித்தியைப்புரியுந் திருவருளோடிருக்கும் நாள் கலியுகத்தில் நாலாயிரத்துத் தொள்ளாயிரத் தெண்பத்தெட்டாமாண்டில் அவ்வாறருள் பெற வேண்டிய மாணுக்கன் மருத்துவவேட்கையனுய்ச்சாதுக்களாலுணரலா மென்னும் துணிவுடன் ஒரு துணைக்கொண்டத் திருமலைக்குவர அடிவாரத் தன்னமிடுவோரது விருப்பத்திற்காகக் கீழ்பால்வரும் பலவடியார்களைக் கண்டு மகிழ்ந்து தானுமன்னமிடவிரும்பினனுய் நிற்கக்குறிப்பால் வினையறிந்தவடியாரதையுணர்வார் முகமாய்த் தன்னை யடைதற்குரிய மாணவன் வரவை யுணர்ந்தும் மறு தடவைக்கருள்புரிவானிருந்தனர். இரண்டாமுறையிலருள் புரிந்து அது பிரபலமாகுமாறருள் புரிந்தனர். அருள் பெற்றமைக்கும் பிரபலத்திற்கு மிடையிற்பத்தாண்டு கழிந்தன. பின்பவராலுலகத்திற்கு யுகதருமத்திற் கேற்றவாறு சரீரமாதலாலுஞ் சரீரத்திற்குத் தக்கவாறு சிகிச்சையாதலாலு மதற்குத்தக்க வாறருள் புரிந்ததன்றி யம்மாணுக்கன்பால் தன்னிடத்திருந்த சித்தருள் ஒருவனை மகனுகத்தந்து அவனுலுலகத்திற் பின்னரு மருத்துவத்தொழில்புரிய வருள் புரிந்தக்குடும்பத்தைத் தன் குடும்பமாக்கிப் போகத்திலும் ஞானத்திலுமிருத்திச் சிறப்புறச்செய்து பாக்கியத்தி லழுத்தி வளருறச்செய் தின்புற்ற வாகனங்களை யளித்தூரக் கண்டு மகிழ்ந்து உலகமுழுதுந் தன் பெய

ரோடு மாணாக்கன் புகழையு மிருத்திப் பின்னர் மன்னனுக்குவித்துத் தானுங் கூடவிருந்து களித்துப்பரம்பரையைத் தனதாக்கிக் குலத்திற்குத் தெய்வமாகி நினைக்குந்தருணத்தில் நினைப்பிலிருந்து வேண்டியதைத்தோற்றுவித்து நிதியமிருக்குமிடமறிந்து அங்கிருந்த காவலையகற்றி நன்னீரளித் தரசமண்டலமாக்கித் தொட்டதைவளர்த்துத்தளராதுயர்த்தி யிப்பரம்பரையையே தனது பரம்பரையாகச் சித்தர்களைப் பிறக்கச்செய்து யுக முழுமையையுங் காலத்திற் கேற்ற மருந்தால் தென்பால் முழுதுந் தனதிடமாகக்கொண்டு சார்ந்த தீவுகளோடு பரிபாலித்துச் சித்திபுரிவர்.

பொதியமலையின்மேலைச் சார்பாற்றோன்றிய சித்திரை யென்னும் நதி யொருபால் விரவப் பெற்றதும் சித்தர்களெல்லாருங் கூடிச் சித்தியுற்றுக் களிப்பதுந் தேவர்களெல்லாருங் கூடி யிறப்ப மகிழ்ந்து வசிக்கப் பெற்றதுமாகிய காரணத்தாற் சித்தமலை யென்றும், உணவை யொழிப்போர்க்குங் கற்பமமைப்போர்க்குங் குளிகைமுடிப்போர்க்கும் வாசிபுரிவோர்க்கும் மருந்து புரிவோர்க்குங் குருமுடிப்போர்க்கும் வேண்டிய மூலிகையோடு ஞானமூலிகையையு முறுதலாற் பெருமலையென்றும், அங்குவந்து தவம்புரிவோர்க்குத் தவங்கூடுதலாற் றவமலையென்றும், பரம சிவகிருபையை முனிவர்பெறுதலாற் சிவமலை என்றும், அங்குவாழுஞ் சித்தரிரவில் யோகம் புரி

யும்பொழுது மணிபூரகமென்னுந் தானத்திலெழு ந்த பிரணவசங்கம் போன்ற நாதத்தைக் கண்டடி வாரத்தில் வாழுமொருவனின்ன தென்றறியாமற் பயந்து மனநடுங்கிய காரணமாக வுடல் சுருண்டு விட வவனைச்சார்ந்தோரிம்மலை சுருளியோ என்ற மையின் சுருளியென் றிவ்யுகத்தும் முனிவரர் பலர் கூடி வேதவிதிப்படி யங்கிவேட்டு யாகம்புரி ந்து வேதமோதி வரம் பெற்றமையின் சுருதிமலை யென்றும்பேர்பெற்ற மலையில் சித்தர் தனது கிருபையா லுலகத்திற்குக் களைகணாய்க் காரண மில்லாக் கருணையினாலுலகமுற்று நிரம்பி யுயிர்க ளின் வினைக்கீடாய்ச் சுகதுக்கங்களை நுகருமதை சாட்சியாகக்கண்டு நல்லருள் புரியுமீசனைப்போல கருணானந்த சித்தரு மவ்வாறே யுலகங்களுக்கேற்க வுயிர்கிற்கு நிலையையுணர்ந்து தக்கவாறு மருந் தினை யுதவுவித்து மருத்துவ விளையாட்டைப் புரி ந்து பொருள்செய்து கலியுகத்தினிறுதியில் நான் குலக்ஷத் திருபத்தையாயிரத்திற்குமேல் தன்னுட னிருந்த சித்தருள் நான்காவது சித்தனைத் தனக் குப் பதிலாக விருக்கச்செய்து தன் பெயரையு மளித்துத் தான் கிருதயுகமுதலில் அப்பிராகிருத கைலைக்குச் சென்றானந்த மயமாகி யின்புற்று வாழ்குவர்.

